# மூலிகைமணி




மலர் 17] ரௌத்திரி ஆண்டு-ஆவணி-Sep-81 [இதழ் 10

மூலிகைமன்னர் கண்ணப்பர்



உள்ளே.........



விலை ரூ. 1-50

அட்டைப் படம் :

# மூலிகை மன்னர் கண்ணப்பருக்கு இரண்டாம் ஆண்டு அஞ்சலி

'மூலிகைமணியின்' நிறுவன ஆசிரியரும், 'மூலிகை மன்னர்' என்று சான்ருேர்களால் பாராட்டப்பட்டுவருமான

**வேலூர் டாக்டர் ஏ. ஆர். கண்ணப்பர்**

அவர்கள் புகழுடம்பு எய்தி (1-9-79) ஆண்டு இரண்டாயிற்று.

மூலிகை வளமே! நாட்டு வளம்! என்று முதன் முதலாக மூலிகைகளின் வாழ்வுக்கு குரல் கொடுத்தவர் **கண்ணப்பர்** ஆவார்.

25 ஆண்டுகளாக, 'மூலிகை மருத்துவம்' எனும் புதிய தோர் மருத்துவமுறையை தமிழகத்துக்கு அறிமுகப்படுத்திய தனிப் பெருமை அவருக்கே உரியதாகும். 'மூலிகை' என்ருல், 'கண்ணப்பர்' என்ற பொருள் உடனே துலங்கும் அளவுக்கு, மூலிகையோடு ஒன்றியவர்; மூலிகை பற்றிய சிந்தனை தவிர வேறு சிந்தனையை நெஞ்சில் கொண்டறியாத அப்பெருந்தகை, 'மூலிகை மருத்துவத்தை' தமிழகத்தின் மூலைமுடுக்குகளிலெல்லாம் பரப்பினுர். பரம ரகசியமாக மறைந்திருந்த பல மூலிகைகளின் பயன் வெட்டவெளிச்ச மாகியது. இன்று மூலிகைப்பண்ணைகள் அமைக்கப்படுவதன் காரணமே, அமரர் கண்ணப்பர் ஆற்றிய ஆதாரப் பணிகள் தான் என்ருல் மறுப்பாரில்லை.

'மூலிகைமணி'யின் ஆன்மநேய ஆசிரியராய் எழுந் தருளி, நம்மை வழிநடத்தும் அமரர் கண்ணப்பர் புகழ்— நானிலம் முழுவதும் பரவ, பாடுபடுவதே நம் கடமை. 'மூலிகை உலகம்' எனும் புதியதோர் உலகத்தை படைப் பதே அவருக்கு நாம் செலுத்தும் நிலையான நினைவஞ்சலி! தொடர்ந்து அவர் காட்டிய வழியில் அயராது பயணம் செய்து நலவாழ்வு காண்போமாக!

—ஆசிரியர், **மூலிகைமணி.**

உ



# சரவணப் பொய்கையில் பிறந்தவனே !

சரவணப் பொய்கையில் பிறந்தவனே
சக்தியின் கைகளில் இணைந்தவனே
பிரணவப் பொருள்தனை உரைத்தவனே
பிறவித் துயரினை மறைப்பவனே (சரவண)

அறுபடை வீட்டினில் அமர்ந்தவனே—திரு
அடியவர் மனத்தினில் நிறைந்தவனே
அரும்பெரும் தத்துவத்தைச் சொன்னவனே—பெற்ற
அப்பனுக்(கு) உபதேசம் செய்தவனே (சரவண)

அறுமுகம் ஒருமுகம் ஆனவனே—ஒரு
ஆனைமுகன் தம்பி நீயவனே
வரும்படை வேல்கொண்டு வென்றவனே—குற
வள்ளி தெய்வானையை மணந்தவனே (சரவண)

டாக்டர் மல்லை. ச. முத்தரசன், சென்னை-29

மூலிகை மணி நடத்தும்

## யோகாசன - மூலிகை மருத்துவப் பயிற்சி வகுப்புகள்.

சென்னை சந்தா வாசக அன்பர்கள் பலரின் வேண்டுகோளுக்கிணங்க 'யோகாசன-மூலிகை மருத்துவ' வகுப்புகளை 'மூலிகை மணி' ஆசிரியர் தன் நேரடிப் பொறுப்பில் வரும் டிசம்பர் 1 முதல் தொடங்கி நடத்த இருக்கின்றார்.

□ ஒவ்வொரு ஞாயிறும் 10 மணி முதல் 1 மணி வரை இந்த வகுப்புகள் நடத்தப்படும்.

□ மொத்தம் 51 வாரங்கள் நடத்தப்படும்.

□ நலம் தரும் யோகாசனங்கள், பிராணயாமம், தேகப் பயிற்சி ஆகியனவும்

□ அன்றாட வாழ்வில் நலவாழ்வுக்கு உதவும் 'நம் நாட்டு மூலிகைகள்' பற்றிய நேரடிப் பயிற்சி, விளக்கவுரை, நவீன ஆய்வு முறைகள் பற்றிய செய்திகள், விரிவுரை, மூலிகைகள் பற்றிய வண்ணப் புகைப்படக்காட்சி, மூலிகைப் பண்ணைகளுக்கு நேரில் சென்று மூலிகைகளை இனம் காணல், சித்தமருந்துகள் தயாரிப்பு முறைகளான செந்தூரம், சூரணம், தைலம், பற்பம், லேகியம் ஆகியன பற்றிய பயிற்சி முறைகளையும் இந்த வகுப்புகளில் கற்றுத் தரப்படும்.

சென்னை மற்றும் சுற்றுப்புறங்களில் உள்ள வாசகர்கள் மட்டுமே சேர்க்கப்படுவர்.

வகுப்புகள் தொடக்கம் : டிசம்பர் 1, 1981.

விவரங்களுக்கு : 1 ரூபாய் அஞ்சல் தலையுடன் க. வேங்கடேசன் 9, கிளப்ரோட் கிழக்கு, செனாய் நகர், சென்னை-30. எனும் முகவரிக்கு எழுதவும்.

உ

மூலிகை வளமே! முருகா நாட்டு வளம்

ஐந்துகரத்தனை யானை முகத்தனை இந்தினிளம்பிறை போலு மெயிற்றனை
நந்திமகன்தனை ஞானக் கொழுந்தனை புந்தியில்வைத்தடி போற்றுகின்றேனே.




# மூலிகை மணி

ஆன்ம நேய ஆசிரியர்,
மூலிகை உலகின் வாரியார்,
அமரர் வேலூர் டாக்டர்

**ஏ. ஆர். கண்ணப்பர் அவர்கள்**

நிர்வாக ஆசிரியர்
க. வேங்கடேசன் எம்.ஏ.,

அறிஞர் குழு
டாக்டர் இலலிதா காமேசுவரன்
டாக்டர் சுப. சண்முகநாதன்
டாக்டர் சிற்சபை

ரௌத்திரி ஆண்டு
ஆவணித் திங்கள்

சந்தா விவரம்:
தனி இதழ் ரூ. 1·50
ஆண்டுச் சந்தா ரூ. 18·00
ஆயுள் சந்தா ரூ. 251·00
ஆயுள் சந்தா செலுத்தினால் ரூ. 150/- மதிப்புள்ள 10 மூலிகைமணி வால்யூம், இலவசமாகத் தரப்படும். ஆயுள்சந்தாவை 5 தவணைகளிலும் செலுத்தலாம்.

மலர்: 17 இதழ் 10
(September – 1981)

அன்பார்ந்த வாசகப்பெருமக்களே
பணிவார்ந்த வணக்கம் !!

கால தாமதமின்றி ஒவ்வொரு மாத இதழையும் ஆங்கிலமாதம் 5 ஆம் தேதிக்குள் அனுப்பும் முயற்சியில் முதல் இதழாக, இம்மாத இதழ் வெளியாகிறது. 10 ஆம் தேதிக்குள் இதழ் கிடைக்கப் பெறவில்லையெனில், அஞ்சலகத்தில் விசாரிக்கவும்.

தமிழ்ப் பல்கலைக் கழகத்தில், 'சித்த மருத்துவப்பிரிவு' தொடங்க வேண்டும்என்று விரிவான கட்டுரை எழுதியுள்ளேன். இது குறித்து வாசகர்கள் கருத்தினை எதிர் நோக்குகிறேன்.

நன்றி, வணக்கம் !

ஆசிரியர், 'மூலிகைமணி'
9, கிளப்ரோட் கிழக்கு
செனாய்நகர் சென்னை-600 080.

எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே.



தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக் கழகம் அமைத்த
முதல்வருக்குப் பாராட்டு !

---

## இருபதாம் நூற்றாண்டின்
## இராச இராச சோழன் !

கடந்த பல நூற்றாண்டுகளாகத் தமிழ் மொழிக்கும், தமிழ்க் கலைகளின் வளர்ச்சிக்கும் எத்தனையோ சான்றோர்களும், அறிஞர்களும், ஆட்சியாளர்களும், ஆக்கப்பணிகள் பலவற்றை, அணிகலனாக்கியுள்ளார்கள். 'உயர்ந்த தமிழ்' எனும் வகையில் தமிழ் மொழி, கலைகள் சிறப்புடன் வளர்ந்தன. ஆட்சி அமைப்புகளிலும் உன்னதமான இடம் பெற்றன. என்றாலும், 'தமிழ் மொழிக்கென ஒரு பல்கலைக் கழகம்' அமையாதது உண்மைத் தமிழ் ஆராய்ச்சியாளரிடையே 'பெரும் குறையாகவே' இருந்து வந்தது. சொல்லப்போனால், தமிழ் அறிஞர்கள் இக்குறையை 'ஓர் ஊனமாகவே' கருதி-அவ்வப்போது அதனை நீக்குமாறு போராடினர்.

ஊனமுற்றோர் ஆண்டல்லவா இது! பலரின் ஊனத்தை நீக்கிய மாண்புமிகு முதல்வர் அவர்கள், 'தமிழுக்கு இருந்த ஊனத்தையும்'' — அறவே நீக்கியுள்ளார்.

தமிழ்ப் பல்கலைக் கழகத்தை விரைவாகத் திட்டமிட்டுத் தஞ்சைத் தரணியில் செயல்பட வைத்துள்ளது—

" இமயத்துக்கும் அப்பாற்பட்ட
இணையற்ற சாதனையாகும் "

'சித்த மருத்துவ ஆராய்ச்சியாளன்' என்ற முறையில் சொல்ல வேண்டுமானால்,

**'போதிய ஆதரவு இன்றி நலிந்துவரும் தமிழ் ஆராய்ச்சிக்கு முதல்வர் அளித்த 'காய கல்பம்' தமிழ்ப்பல்கலைக்கழகம்'** என்றால் மிகையல்ல.

அமுதத் தமிழ் அளித்த ஔவைக்கு 'கருநெல்லிக்கனி' எனும் காய கல்பத்தினை அளித்த 'அதியமானின் அருஞ் செயலுக்கு' இணையாக வைத்து முதல்வர் அவர்களைப் போற்றலாம்.

மேதகு ஆளுநர் சாதிக்அலி அவர்கள் தம் உரையில் குறிப்பிட்டதுபோல், **'தமிழ்ப்பல்கலைக் கழகம், தமிழ் ஆராய்ச்சி வளர்ச்சியில் மறுமலர்ச்சியையும் புதிய சகாப்தத்தினையும் உருவாக்கும்'** என்பதில் ஐயமில்லை.

தஞ்சையில் ஆயிரம் ஆண்டுகட்குமுன் **பெரிய கோயிலைக் கட்டி** அழியாப் புகழ்பெற்ற **இராச இராச சோழனைப்போல்,**

ஆயிரம் ஆண்டுகட்குப் பின், அதே தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக் கழகமெனும், **"பெரிய கல்விக் கோயிலைக்"** கட்டி **இராச இராச சோழனின் வாரிசாகத்** தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டுள்ளார் திரு. எம். ஜி. ஆர் அவர்கள். 'புரட்சித் தலைவர்', 'பொன்மனச் செம்மல்' எனும் அவருக்குரிய புகழாரங்கள், இதனால் **புதுப்பொலிவையும், சிறப்புத் தகுதியையும்** பெற்றுள்ளன.

எதிர்கால வரலாற்று ஆசிரியர்கள் முதல்வர் எம்.ஜி. ஆரை **'இருபதாம் நூற்றாண்டின் இராச இராச சோழன்'** என்றே குறிப்பிடுவர் என்பதில் சந்தேகமில்லை.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் தன்னேரில்லாத் தளராப் பணியால் **"அறிவியல் தமிழ்"** எனும் **புதிய தமி**

உருவாக வேண்டும். இயல், இசை, நாடகம், எனும் 'மூன்றுதமிழ்', வழக்கு மாறி-இயல், இசை, நாடகம், அறிவியல் எனும் 'நான்கு தமிழ்' வழக்கு மலர தமிழ் ஆராய்ச்சியாளர்கள் அயராது உழைக்க—இந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்வார்களாக!

## திரு. எம். ஜி. ஆர். அவர்கட்கு 'டாக்டர்' பட்டம்

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் வாயிலாக அளிக்கப்பெறும் 'முதல் டாக்டர்' பட்டம் மாண்புமிகு முதல்வர்க்கு அளிக்கப் பெறுதல் வேண்டும். இதற்குரிய தகுதியைப் பற்றி அணுவளவு ஐயமும் தேவையில்லை.

தமிழ்த் திரைப்பட உலகில், திரு. எம். ஜி. ஆர். அவர்கள் 25 ஆண்டுகளாக ஆற்றி வரும் பல்வேறு சாதனைகளை, ஆராயும் எவரும், அவர் சாதனைகளை, 'டாக்டர்' பட்ட ஆய்வுக்குரிய பொருளாகவே கருதுவர். அந்த அளவுக்குத் திறமையும், தகுதியும் பெற்றுள்ளார். அத்துடன், அண்மைக் காலத்தில் தமிழ் மொழிவளர்ச்சிக்கு அவர் ஆற்றிவரும் இணையற்ற தொண்டுகளையும் கருத்தில் கொண்டால்—

அவருக்கு 'டாக்டர்' பட்டம் தருவது என்பது இரட்டிப்பு வலிமையைப் பெறும். 'தமிழ்த் திரைப்படச் சாதனை, தமிழ் மொழி, கலை வளர்ச்சிக்கு" திரு. எம். ஜி. ஆர் ஆற்றிய பணிகளைக் கருத்தில் கொண்டு—தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் தன் முதல் 'டாக்டர்' பட்டத்தினை திரு. எம். ஜி. ஆர் அவர்கட்கு அளித்துப் பெருமையுற வேண்டும்.

அரசியல், இனம், சாதி, சமயபேதங்களுக்கு அப்பாற்பட்ட நிலையில் உள்ள எவரும், மனம் திறந்து போற்றத்தக்க அரிய செயலை, காலம் கருதி, விரைந்து, ஆற்றியுள்ள மாண்புமிகு முதல்வர் அவர்களைத் 'தமிழ் ஆராய்ச்சியாளன்' என்ற முறையில் 'நடுநிலைப் பார்வையுடன்' நான் மனதாரப் பாராட்டுகிறேன்.

அமுதத் தமிழ் வளர்க்க அரும்பாடு படும் அவர் நீடூழி வாழ, இறைவன் அருள்புரிவாராக.

க. வேங்கடேசன்
ஆசிரியர் 'மூலிகை மணி'

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில்
" சித்த மருத்துவ அறிவியல் !"
(Faculty of Siddha Medical Science)

# துணைவேந்தருக்கு வேண்டுகோள்

தமிழ்நாட்டில் உள்ள பல்கலைக்கழகங்களில்,

**'தமிழ் சித்த மருத்துவ அறிவியலுக்கு'** எனத் தனித்ததோர் உயர் ஆராய்ச்சி மையம் (Centre for Advenced Study in Siddha Medical Science) தேவை—என்பதை கடந்த 10 ஆண்டுகளாக, 'மூலிகை மணி' அவ்வப்போது தலையங் கங்கள் எழுதி, வந்துள்ளதை வாசகர்கள் அறிவர். ஆனால், இதுவரை அமையவில்லை.

தமிழ் மொழிக்கென—அமைக்கப்பட்ட **'தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திலாவது'** - 'சித்த மருத்துவ அறிவியலுக்கென' உயர் ஆய்வு மையம் அமைக்கவேண்டும் என்ற நீண்டநாள் கோரிக்கையை மீண்டும் வலியுறுத்தி, துணைவேந்தர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியன் அவர்கட்கு, அனுப்பி யுள்ளோம்,

வாசகர்களும் 'மூலிகை மணி'யின் கருத்தை வலி யுறுத்தித் தஞ்சைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் அவர் கட்குக் கடிதம் எழுதி அனுப்புமாறு வேண்டுகிறோம்.

**ஆசிரியர்.**

செப்டம்பர் **15, 1981**—தமிழ் ஆராய்ச்சி உலகம், புதிய பாதையில் அடியெடுத்து வைத்த நன்னாள். தமிழ் மொழி, கலை, பண்பாடு ஆகியவற்றில் உயர் ஆராய்ச்சி செய்வதற்கென தஞ்சைத் தரணியில், **'தமிழ்ப் பல்கலைக் கழகம்'** தொடங்கி வைக்கப்பட்டுள்ளது.

''அரசியல், இனம், சமய பேதங்கள்—குறுக்கீடுகள் இன்றி இந்தப் பல்கலைக் கழகம், உயர் ஆராய்ச்சி நடத்த அரசு உதவும்'' என்றும்

''தமிழில் உள்ள கலை, அறிவியல் சாதனைகளை உலகுக்கு உணர்த்தும் வகையில்—தமிழைப் படித்தால் மட்டுமே இவற்றைப் புரிந்துகொள்ள முடியும் என்ற நிலையைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் தோற்றுவிக்க வேண்டும்''

என்று கருத்துரைத்துள்ளார் மாண்புமிகு முதல்வர் அவர்கள்.

முதல்வர் கூறியபடியே, எவ்வித அரசியல், இன, சாதி குறுக்கீடுகள் இன்றித் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்குத் தகுதி அடிப்படையில் முதல் துணை வேந்தராக, உலகப் புகழ் பெற்ற திராவிட மொழியியல் பேரறிஞரும், தமிழில் ஆழ்ந்த புலமையும், தமிழாய்வில், அறிவியல் போக்குடன் செயல் படுபவருமான. டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியன் அவர்களை நியமித்துள்ளார்.

**தரமான ஆய்வுகள் இப் பல்கலைக் கழகத்தில் நடைபெறும் என்பதற்குப் பச்சைக்கொடி காட்டியது போல்—இந்த நியமனம் அமைந்திருப்பது நல்ல சகுனம். ''நல்ல தொடக்கம், பாதி வெற்றி !'' எனும் மொழிக்குச் சான்ருக, இந்த நியமனம் அமைந் துள்ளது.**

பல்கலைக் கழகத்தின் தொடக்கப் பணியாக, ஐந்து பெரும் புலங்கள் (Faculties) அமைக்கப்பட்டுள்ளன. இவற்றில், ஐந்தாவது 'புலம்' என்று 'அறிவியல் புலம்' (Facuty of Sciences), அமைக்கப்பட்டுள்ளது.

தமிழில் உள்ள அறிவியல் துறைகளைப் புலப்படுத்தும் புலம் 'அறிவியல் புலம்'—ஆக இருத்தல் கூடும். அவ் வகையில். முதல் அறிவியல் புலமாக நாம் கருதுவது— **'சித்த மருத்துவ அறிவியல்'** புலமே யாகும்.

தமிழில் 'அறிவியல்' உள்ளது என்பதை உறுதியாக நிறுவ உதவும் துறைகளில் தலையாயது, 'சித்த மருத்துவ அறிவியல்' என்பது நமது கருத்தாகும்.

எனவே, தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் ஐந்தாவது புலம் எனப்படும் **'அறிவியல் புலம்'** எனும் பிரிவின் கீழ், முதல் அறிவியல் துறையாக,

'சித்த மருத்துவ அறிவியல் துறை'யை (Dept. of Siddha Medical Science) துவக்க வேண்டும் எனத், துணை வேந்தர் டாக்டர் வி. ஐ, சுப்பிரமணியம் அவர்களை, மூலிகைமணியின் வாசகர்கள் சார்பில் கேட்டுக்கொள்கிறோம்.

**'சித்த மருத்துவ அறிவியல் துறை'** அமைக்க வேண்டிய இன்றியமையாமையையும்; அமையவேண்டிய முறைகளையும்—'மூலிகை மணி', கீழ்க்கண்டவாறு விளக்குகிறது.

## சித்த மருத்துவ அறிவியல் துறை அமைப்பதின் இன்றியமையாமை

தமிழ் மொழியின் தனித்தன்மைக்குச் சான்றாகத் திகழும், பல்வேறு ஆதாரங்களுள், 'சித்த மருத்துவமும்' ஒன்றாகும். இந்தியா முழுமையும், ஆயுர்வேதம் தழைத்துள்ளது. தமிழ் நாட்டில் மட்டுமே 'சித்த மருத்துவம்' தனி மருத்துவமாக, வாழ்ந்து வருகிறது. ''ஆயுர்வேதத்தினின்று — சித்த மருத்துவம் முற்றிலும் வேறுபட்டது'' என்பதை நிறுவ ஏராளமான சான்றுகள் இருந்தபோதிலும், நெறிமுறைக் குட்பட்ட வகையில் இந்தச் சான்றுகளைக் கடந்த காலத்தில் யாரும் புலபபடுத்தாமையினால், 1971-வரை, 'சித்த மருத்துவம்' — ஆயுர்வேதத்தின் ஓர் அங்கமாக — மத்திய அரசால் கருதப்பட்டு வந்தது. முன்னாள் அமைச்சர் அன்பழகன் போன்றோர் எடுத்த முயற்சிகளால், 1972-முதல் 'சித்தமருத்துவம்' தனி மருத்துவமாக ஏற்கப்பட்டுள்ளது.

என்றாலும், இன்றும் கூட வட மாநிலங்களிலும் உலக அரங்கிலும், இந்திய மருத்துவம் என்றால், 'ஆயுர்வேதத் தைத்தான்' குறிப்பிடுகிறார்களே யொழிய, தென்னாட்டில் 2500 ஆண்டுகளுக்கு முன் தோன்றி, இன்றும் வாழ்ந்து வரும் சித்த மருத்துவத்தைக் குறிப்பிடுவதில்லை. காரணம், விடுதலைக்குப் பின், இந்தியா முழுமையும் உள்ள நூற்றுக் கணக்கான பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள் ஆயுர்வேத முறையை போட்டிப் போட்டுக்கொண்டு வளர்த்தன. இதனால் உலக அரங்கில், ஆயுர்வேதம் பரவ ஆரம்பித்தது. இந்நிலைக்கு மாறாகத் தமிழ்நாட்டில் கூட சித்த மருத்துவத்தினை வளர்க்க—அன்றைய ஆட்சியாளர்கள் முன்வரவில்லை. இன்று K M C என்று வழங்கப்படும் கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி இருக்குமிடத்தில், காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் சித்த மருத்துவத்தைக் கற்பிக்கும் பள்ளி ஒன்று நடத்தப் பட்டு, அதுவே G C I M - என்ற பட்டப்படிப்பையும் நடத்தியது. ஆனால், மேநாட்டு மருத்துவக் கல்வி முறையில் நாட்டம் கொண்ட அரைவேக்காடுகளின் சதித் திட்டங்களால், இந்தக் கல்லூரி, மாணிக்கவேலர் காலத்தில்இழுத்து மூடப்பட்டதுடன், 'சித்த மருத்துவக் கல்விக்கு' -முடுவிழாவையும் நடத்திவிட்டார்கள்.

பல சித்த மருத்துவச் சங்கங்கள், 'மூலிகை மணி' கண்ணப்பர் போன்றோரின் போராட்டங்களால், பாளையங் கோட்டையில் மீண்டும் சித்த மருத்துவக் கல்லூரி தொடங்கப்பட்டு அன்பழகன் காலத்தில் சில நிலையான வளர்ச்சியைப் பெற்றது - வரலாறு உணர்த்தும் உண்மைகள்.

இன்றுள்ள நிலைமைகள் வேறு. சித்த மருத்துவர்களே சித்த மருத்துவத்தைக் கைவிட்டாலும் கூட, பல நவீன மருத்துவ ஆராய்ச்சியாளர்கள், சித்த மருத்துவத்தைக் கைவிட மாட்டார்கள். அதிலும் குறிப்பாக, நவீன மருந்தியல் ஆய்வுகளை நிகழ்த்தும், Pharmacologists, Bio-Chemists, போன்றோர், தமது சீரிய ஆய்வுகட்குச் சித்த

மருத்துவத்தை நாடி வரத் தொடங்கியுள்ளனர். காரணம், மிகப் பெரிய வேதியல் முறைகள் எல்லாம், தமிழில் உள்ள மருத்துவ நூல்களில்தான் உள்ளன. எம். ஜி. ஆர் அவர்கள் கூறியபடி, 'தமிழைப் படித்தால் மட்டுமே - இவற்றை ஆராய முடியும்' என்ற நிலை, சித்த மருத்துவ அறிவியல் துறைக்கு மிகவும் பொருந்துகிறது. அறிஞர் T. V. சாம்ப சிவம் பிள்ளை அவர்கள் குறிப்பிட்ட கீழ்க்கண்ட கருத்து ஈண்டு சிந்திக்கத் தக்கது.

In the Siddha system, Chemistry had been found developed into a Science auxillary to Medicine and Alchemy. It was found useful in the preparation of medicines for curing all sorts of sufferings' spiritual as well as corporeal and also in transmutation of baser metals into gold. The knowledge of plants and minerals was of a very high order, Siddhar's presentation of Chemistry is masterly so far as it has gone, but unfortunately it is fragmentary.

If one really wants to gather knowledge and collect materials for research in the field of ancient chemistry, he can find all that he wants only in the works of Tamil Siddhars; no such treatise on the subject could be fo und elsewhere dealing so exhaustively as found therein; and moreover the Siddhars were the greatest scientists both meterial and spiritual, of ancient days; and they were fully acquainted with almost all the branches of science.

43 ஆண்டுகட்கு முன் கூறிய அவருடைய கருத்து - இன்னும் நடைமுறைப் படுத்தவில்லை. இக்கருத்துக்கு ஆதரவாக டாக்டர் இலலிதா காமேசுவரன் அவர்கள், ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டில் கூறிய கீழ்க்கண்ட கருத்தினையும் கருதலாம்,

''......அடுத்து வரும் 10 ஆண்டுகளில் சித்த மருத்துவ ஆராய்ச்சிக்காக ஆண்டொன்றுக்கு 10 லட்சம் வீதம் அரசு செலவிடுமேயானல், 11.வது ஆண்டிலிருந்து அரசுக்கு ஆண்டொன்றுக்கு 1 கோடிக்கு மேல் வருமானம் தரத்தக்க அரிய மருந்துகளைச் சித்த மருத்துவ ஆராய்ச்சியிலிருந்து தயாரித்து அளிக்க முடியும். தமிழ்நாடு அரசு உடனடியாகச் ''சித்த மருத்துவ ஆராய்ச்சிக் கழகம்'' ஒன்றை அமைக்க வேண்டிய தருணம் வந்துவிட்டதை உணர்ந்து, பல ஆய்வுகளை நிகழ்த்த உதவ வேண்டும்,'' என்று குறிப்பிட்டுள்ளார்.

ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டினை யொட்டி, மதுரையில் மூலிகை மணி நடத்திய 'சித்த மருத்துவ ஆய்வரங்கத்'தில் பங்கேற்றுக் கருத்துரைத்தத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள், ''தஞ்சையில் அமைய இருக்கும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சித்த மருத்துவத்துக்குத் தனித்ததோர் துறை அமைக்க வேண்டும். ஆங்கிலத்தை வளர்க்கும் பல்கலைக் கழகங்களில் எப்படி ஆங்கில மருத்துவக் கல்லூரிகள் அமைகிறதோ—அதே வகையில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் 'சித்த மருத்துவம்' அமைவது இன்றியமையாதது'' என்று வலியுறுத்திக் கூறியுள்ள கருத்தும் தற்போது செயல்படத்தக்க நேரம் வந்துவிட்டது.

ஆகவே, மேற்கண்ட கருத்துக்களின் உண்மைகளை துணைவேந்தர் அவர்கள் நன்குணர்ந்து, உடனடியாக, அதிலும், 'அறிவியல் புலம்' எனும் பிரிவில் முதல்துறையாக—'சித்த மருத்துவ அறிவியல்' துறையை உருவாக்க அனைத்து நடவடிக்கைகளையும் விரிவாக மேற்கொள்ளுமாறு 'மூலிகை மணி' வேண்டிக்கொள்கின்றது. இதில் தயக்கத்திற்கோ - தள்ளிப் போடுவதற்கோ - எக்காரணமும் இல்லை என்பதையும் எடுத்துக்கூற மூலிகை மணி விழைகிறது.

## 'சித்த மருத்துவ அறிவியல் துறை'

(அமைப்பும்—செயல்முறையும்)

திட்ட வரைவு

**நோக்கம் :**

அடுத்து வரும் 10 ஆண்டுகளில் 'சித்த மருத்துவ அறிவியலுக்கென'—உயர் ஆராய்ச்சி மையம் அமைக்கும் வகையில் (Centre for Advanced Study in Siddha Medical Science) தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில், 'அறிவியல் புலம்' எனும் பிரிவின் கீழ், முதல் துறையாக, சித்த மருத்துவ அறிவியல் துறையை உருவாக்குதல்.

### அமைப்பு முறை

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம்

↓

(ஐந்தாம் புலம்)

அறிவியல் புலம்

↓

(முதல் துறை)

சித்த மருத்துவ அறிவியல் துறை

(Dept. of Siddha Medical Science)

இவ்வாறு அமையும் சித்த மருத்துவ அறிவியல் துறையை - கீழ்க்கண்டவாறு பகுத்து ஆய்வுப் பணிகளை மேற்கொள்ளலாம்.

இந்தத் துறை, கீழ்க்கண்ட இரு பெரும் பிரிவுகளாக அமைய வேண்டும்.

அ. சித்த மருத்துவ இலக்கியப் பிரிவு.
(Siddha Medical Literary Unit)

ஆ. சித்த மருந்து—ஆராய்ச்சிப் பிரிவு.
(Siddha Medicines-Experimental Unit)

## அ. இலக்கியப் பிரிவு

கீழ்க்கண்ட இரு துணைப் பிரிவுகளாக அமைந்து செயல் படவேண்டும்.

1. சித்த மருத்துவ இலக்கிய நூல் தொகுப்பு—பதிப்புப் பிரிவு.

2. நாட்டுப்புற மருத்துவ முறைகள் தொகுப்புப் பிரிவு.

### 1. சித்த மருத்துவ இலக்கிய நூல் தொகுப்புப் பிரிவு

இப்பிரிவின் கீழ் தமிழகமெங்கும் சிதறிக் கிடக்கும் சித்த மருத்துவ இலக்கிய நூல்கள், ஓலைச்சுவடிகள், ஏடுகள், இதுவரை வெளிவந்துள்ள வெளிவராத நூல்கள் அனைத்தையும் ஒருங்கே திரட்டவேண்டும். இன்றுள்ள நிலையில் சித்த மருத்துவ நூல்கள் ஏடுகள் பலரிடமும், பல அமைப்புகளிடமும் சிக்கிக்கொண்டு - தொகுப்பின்றி உள்ளது. இதனால், சித்த மருத்துவம் பற்றிய பாடநூல்களை எழுதுவதற்கும் இயலவில்லை.

ஃ சென்னையில் பல்கலைக் கழக நூலகத்தில் ஏராளமான மருத்துவச் சுவடிகள் தொடுவாரின்றி உறங்கிக் கிடக்கின்றன.

ஃ அரும்பாக்கத்தில் உள்ள இந்திய இயக்குனர் அலுவலகத்தின் கீழ் இயங்கும், பாடநூற் குழுவிடம் ஏராளமான மருத்துவச்சுவடிகள் தேங்கியுள்ளன.

ஃ இன்றும் இதுபோல் பலரிடமும் ஏடுகள்—பாதுகாப்பின்றி இன்னொரு ஊ. வே. சாமிநாத அய்யர் வரவு நோக்கி நலிந்துவருகின்றன. இவ்வாறு சிதறிக் கிடக்கும் மருத்துவச் சுவடிகளைத் தொகுத்து ஒரே தலைமையின் கீழ், பகுத்து, உரைவிளக்கமும் எழுதிப் பதிப்பிக்கும் பணியைச் சித்த மருத்துவ அறிவியல் துறையின் 'இலக்கிய ஆய்வுப் பிரிவு' ஏற்கவேண்டும்.

## 2. நாட்டுப்புற மருந்து முறைகள் தொகுப்புப் பிரிவு

கி. பி. 16 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு ஏற்பட்ட பல்வேறு ஆட்சி அமைப்புகளாலும், நவீன நாகரிகப் போக்காலும், சித்த மருத்துவ முறைகள் பல நாட்டுப்புறங்களில் தஞ்சம் புகுந்தன. 'நாட்டு மருத்துவம்' என்றும் 'கிராம வைத்தியம்', 'பாட்டி வைத்தியம்' என்று குறிப்பிடப்படுவதெல்லாம் கடந்த காலத்தில் கிராமங்களில் ஒதுங்கிய சித்த மருத்துவத்தின் மறுவடிவமே யாகும். பாடல்கள், பழமொழிகள், கைமுறை அனுபவமுறைகள் எனப் பல்வேறு வடிவங்களில் வாழ்ந்து வரும் தமிழ் மருத்துவ முறைகள் அனைத்தும், அரிய மருத்துவப் பயன் உடையவை. தமிழக முழுவதும் உள்ள இவற்றை முதலில் தொகுத்து, ஏடுகளில் உள்ளவற்றோடு ஒப்பிட்டு, வகைப்படுத்த வேண்டும். இது மிகவும் அவசரமாக ஆற்றவேண்டிய பணியாகும். மற்ற மாநிலங்களில் உள்ள நாட்டுப்புற மருந்து முறைகளைவிடத் தமிழகத்தில் ஏராளமான அளவில், வாய்மொழி வாயிலாக அனாதையாக வாழ்ந்துவரும் தமிழக நாட்டுப்புற மருந்து முறைகளுக்குத் தஞ்சைப் பல்கலைக் கழகம் தஞ்சம் அளிக்க முன்வரவேண்டும். அவ்வகையில். 'இலக்கிய ஆய்வுத் துறையின்' இன்னொரு பிரிவாக

'நாட்டுப்புற மருந்து முறை தொகுப்புப் பிரிவு' எனும் தலைப்பில் ஒரு பிரிவு அமைதல் வேண்டும்.

இலக்கிய தொகுப்புப் பிரிவு

நாட்டுப்புற மருந்து தொகுப்புப் பிரிவு

எனும் இரு பிரிவுகளாகச் சித்தமருத்துவ இலக்கிய ஆய்வுத் துறை இயங்கவேண்டும். ஏட்டு மொழிகளிலும், வாய் மொழிகளிலும் பரவிக்கிடக்கும் சித்த மருத்துவக் குறிப்புகளைத்

தொகுப்பதும் Collections
பகுப்பதும் Classifications
விளக்குவதும் Comments

ஆகிய முப்பணிகளைச் சித்தமருத்துவ அறிவியல் புலத்தின் முதல் துறையான 'சித்த மருத்துவ இலக்கிய ஆய்வுத்' துறை ஏற்கவேண்டும்.

இப்பிரிவில் பணிபுரியத் தக்கவர்கள் தமிழிலக்கியத் திலும், மருத்துவத்திலும் புலமை மிக்கவர்களாக இருத்தல் வேண்டும். தமிழில் முதுகலை பயின்றவர்களையும் - சித்த மருத்துவத்தில் மருத்துவப் பட்டப்படிப்பு படித்தவர்களைக் கொண்டும் - இந்த இலக்கிய ஆய்வை நிகழ்த்தலாம். அடுத்த 10 ஆண்டுக்குள் - தமிழகத்தில் உள்ள அனைத்து மருத்துவ ஏடுகளும், நூல்களும், நாட்டுப்புற மருந்து முறை களும், தஞ்சைப் பல்கலைக் கழகத்தில் ஒருசேரக் காணப்படும் வகையில் இத்துறை விரைந்து செயல்பட வேண்டும்.

### ஆ. சித்த மருந்து ஆய்வுத்துறை
(Siddha Medical Experimental Unit)

இந்தத் துறையின் மூலமாகத்தான் ''சித்த மருத்துவம் அறிவியல்'' என்ற நிலையை உறுதிப்படுத்தப் போகிறது இந்தத் துறையை

---

(அ) சித்த மருத்துவ மனை மையம்
(Siddha Clinical Hospital Centre)

(ஆ) சித்த மருந்து ஆய்வு மையம்
(Siddha Medicine Research Centre)

---

(அ) சித்த மருத்துவ மனை மையம்
(Siddha Clinical Hospital)

ஆஸ்துமா, மேகநோய், மஞ்சள்காமாலை, வயிற்று நோய்கள்—போன்றவற்றிற்கு, சித்த மருத்துவத்தில்

பூரணமான சிகிச்சை முறைகள் இன்றும் உள்ளன. இவற்றைத் தற்காலப் போக்கில் அணுகி விளக்குவதற்குரிய வர்கள் சிலரே உள்ளனர். அவர்கள் துணைக்கொண்டு—'சித்த மருத்துவ மனை மையம்' அமைத்து, அதன் கீழ்,

1. சித்த மருந்தாக்கியல் பிரிவு
   (Siddha Pharmacy Wing)

2. நோய் நாடல், நோய் முதல்நாடல் பிரிவு
   (Siddha Diagnostic Wing)

3. அகப்புற நோயாளிகள் சிகிச்சைப் பிரிவு
   (In patiant & Out patient Wing)

எனும் முப்பிரிவுகள் இயங்க வேண்டும்.

மேற் குறிப்பிடப்பெற்ற நோய்களுக்குரிய சித்த மருத்துவப் பரிகாரங்களை சிசிச்சை (Clinical Trials) அளிப்பதன் மூலம் ஆராய வேண்டும்.

## (ஆ) சித்த மருந்து ஆய்வு மையம் Siddha Medicines Research Centre

உலக அரங்கில் சித்த மருந்துகளை, நவீன ஆய்வு முறைகளில், நெறிப்படுத்த வேண்டிய கால கட்டம் வந்து 25 ஆண்டுகள் ஆகிவிட்டன. வட மாநிலங்களில் ஆயுர்வேத ஆய்வுக்காகப்பல்வேறு பல்கலைக் கழகங்களிலும், மருத்துவக் கல்லூரிகளிலும் நவீன ஆயுர்வேத ஆய்வுக் கூடங்களே அமைந்துவிட்டன. நம் தமிழகத்தில், சித்த மருந்துகள் ஆராயப்படும் ஆய்வுக்களத்தைக் கூட இன்னும் எட்டிப் பார்க்கவில்லை. இந்நிலையை 'ஜெட்' வேகத்தில் மாற்ற, தமிழ்ப் பல்கலைக் கழகம் தீவிரமாகச் செயல்ட வேண்டும்.

இந்த மையத்தினைக் கீழ்க்கண்ட முப்பெரும் பிரிவுகளாக அமைக்க வேண்டும் :

1. சித்த மருந்து வேதியல் பிரிவு
   Siddha Medicinal Chemistry wing

2. சித்த மருந்து மூலிகைகள் பிரிவு
Siddha Medicinal Botany wing

3. சித்த மருத்துவ சிறப்பு ஆய்வுப் பிரிவு
Special Features in Siddha Treatment wing

1. சித்த மருந்து வேதியல் பிரிவு
Siddha Medicinal Chemistry wing

பல நூற்றுண்டுகட்கு முன்னரே சித்த மருத்துவத்தில், மருந்து செய்முறைகள் கீழ்க்கண்ட நான்கு மூலங்களிலிருந்து தயாரிக்கப்பட்டன.

1. மூலிகைகள் (Vegetables)
2, உலோகங்கள் (Metals)
3, தாதுப் பொருட்கள் (Minerals)
4. சீவராசிகள் (Animals)

இந்நான்கு வகை மூலங்களிலிருந்து பெறப்பட்ட நூற்றுக் கணக்கான மருந்து வகைகளைத் தொகுத்து, வகை தொகை செய்வது முதல் பணி.

வகை தொகை செய்யும்போது, நவீன ஆய்வு முறைகளைக் கருத்தில் கொண்டால், கீழ்க்கண்ட உட்பிரிவுகளாக அவற்றைப் பிரிக்கலாம்.

1, உயிர் வேதியல் ஆய்வு
(Bio-chemical Research)

2. மருந்தியல் ஆய்வு
(Pharmacological Research)

எனும் பிரிவில் ஆராய வேண்டும்.

ஏற்கெனவே சென்னைப் பல்கலைக் கழகத்திலும், மதுரைப் பல்கலைக் கழகத்திலும், இவ்வகை ஆய்வுகள் தொடங்கப்பட்டுள்ளதையும், அவை நல்ல பல வெற்றிகளையும் அளித்து வருவதை ஈண்டுக்கருத்தில் கொள்ளலாம்.

2. சித்த மருந்து மூலிகையியல் பிரிவு
Siddha Medicinal Botany wing

தமிழ்நாட்டில் மலைகளிலும், காடுகளிலும், ஏராளமான மருந்துச் செடி கொடிவகைகள் விளைந்து கிடப்பதைப் பல ஆண்டுகட்கு முன்னர் சித்தர்கள் ஏடுகளில் பாடியுள்ளனர். பரம்பரை பரம்பரையாக வரும் மருத்துவர்கள் இவற்றை இனம் கண்டுக் காப்பாற்றி வந்தார்கள். அவர்களை எந்த அரசும் போற்றிக் காப்பாற்றுமையினால், ஒரு பரம்பரை அழிந்தால்—குறைந்தது 50 மூலிகைகளைப் பற்றிய இனம் காணும் செய்திகளும் அழிந்தன. சித்த மருத்துவத்தில் 1008 மூலிகைகள் இடம்பெற்றுள்ளன. அவற்றில் சரி பாதியைக் கூட இன்று இனம் காண்பார் இல்லை. இந்நிலை நீடித்தால் அடுத்த தலைமுறைக்குள் இருப்பதும் அழியும் அபாயம் உள்ளது. எனவே, இந்தப் பிரிவு உடனடியாக, குறைந்தது 20 ஏக்கர் பரப்பளவில் 'சித்த மருந்து மூலிகைப் பண்ணை'யை அமைத்து, ஏடுகளில் கூறப்பட்டுள்ள மூலிகைகளை இனம் கண்டு உறுதி செய்து அவற்றை வளர்த்து—'இனம் காண உதவும் மூலிகைப் பண்ணையாக' வளர்க்க வேண்டும்.

அத்துடன், மூலிகையியல் துறையில் அண்மைக்கால அறிவியல் அணுகுமுறைகளான, Phyto-chemical, மற்றும், Pharmacognosy, முறைகளில் ஆய்தல் வேண்டும். இதற்காக, இவ்விரு பெயரிலேயே உட்பிரிவுகள் அமைய வேண்டும்.

3. சித்த மருத்துவ சிறப்பு ஆய்வு
Special Featurres in Siddha Treatment wing

சித்த மருத்துவத்தில் மட்டுமே கூறப்பட்டுள்ள நீண்ட நாள் வாழும் வகைக்குதவும் காயகல்ப முறைகளையும், மருந்துகளை எளிதாகத் தயாரிக்க உதவும் முப்பு, பூநீர் போன்ற மருந்தாக்க முறைகளையும், யோக சிகிச்சை-

போன்றவற்றையும் ஆராயும் சிறப்பு ஆய்வுகளையும், இப் பிரிவின் கீழ் அமைத்தல் வேண்டும். இவை சித்த மருத்து வத்தின் தனிச்சிறப்பினை நிறுவ உதவும்.

இந்தத் 'திட்ட வரைவு'க் கேற்ப 'சித்த மருத்துவ அறி வியல் துறை' செயல்படுமேயானால், அடுத்த 10 ஆண்டுகட் குப் பிறகு, Centre for Advanced Study in Siddha Medical Science என்ற உயர் ஆய்வு மையமாக உருப்பெறும்.

அதற்குப்பின் உலக அரங்கில் உள்ள உயர் ஆராய்ச்சி யாளர்கள் தஞ்சைப் பல்கலைக் கழகத்தினை நாடி வருவர்.

### இந்தத் திட்டத்தினைச் செயல்படுத்த வல்லார்

இவ்வளவு பெரிய திட்டத்தினை செயல்படுத்த உதவும் அறிஞர்களை மூன்று அமைப்புகளிலிருந்து பெறலாம்.

1. தமிழில் புலமையும் சித்த மருத்துவ அறிவும் கொண்ட வர்கள். (தமிழில் 'டாக்டர்' பட்டமும், முதுகலைப்பட்ட மும் பெற்றுச் சித்த மருத்துவ அறிவையும் பெற்ற வர்கள்)
2. சித்த மருத்துவத்தில் தற்கால உயர் பட்டப் படிப்பைப் பெற்றவர்கள் (பாளையங்கோட்டையில், முதுநிலை சித்த மருத்துவப் படிப்புப் பயின்றவர்கள், M.D., (Siddha) B.I.M. போன்றவர்கள்.)
3. நவீன மருத்துவப் படிப்புப் படித்து சித்த மருத்துவத்தில் ஆராய்ச்சி ஆர்வமுள்ள, மருத்துவர்கள்—M.B.B.S., M.D., Pharmacologists, Bio-chemists, Phyto Chemists, மற்றும் Botanists, Pharma-cists-போன்றவர்கள்.

### இந்தத் திட்டத்திற்கு ஆகும் செலவை ஏற்கும் நிறுவனங்கள்

இரண்டு ஐந்தாண்டு திட்ட அளவில், இந்தத் திட்டத் தினைப் பகுத்தால்—

முதல் ஐந்தாண்டுத் திட்டத்திற்கு 5 கோடியும்

அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் 10 கோடியும் சராசரியாக நிர்மாணச் செலவாக அமையும்.

பல்கலைக் கழகம் கீழ்க்கண்ட நிதி உதவி அமைப்புகளிலிருந்து படிப்படியே திட்ட வடிவங்களை விளக்கிப்—பண உதவி பெறலாம்.

1. இந்திய மருத்துவ இயக்குனர் அலுவலகம், தமிழ் நாடு.

2. தமிழ்நாட்டில் உள்ள மருத்துவ ஆய்வு மையங்கள்.

3. பல்கலைக் கழக நிதி நல்கைக் குழு.

4. இந்திய அரசு நிறுவியுள்ள **Central council for Reasarch in Ayurveda & Siddha.**

5. யுனெஸ்கோ.

6, உலக சுகாதார நிறுவனம்,

7. தமிழகத்தில் உள்ள அறக்கட்டளைகள், மடாலயங்கள்.

**முடிப்புரை**

சித்தர்கள் வளர்த்துத் தந்த மிகப்பெரிய அறிவியல் கடந்த 400 ஆண்டுகளாகப் புறக்கணிக்கப்பட்டு வந்துள்ளது. என்றாலும், மறைந்தவை போக, இருப்பவை பற்றிய தொகுப்பிலும், ஆய்விலும், இனியாவது நாம் ஈடுபடா விட்டால், தமிழுக்கு மட்டுமல்ல; எதிர்காலத் தலைமுறைக்கும் செய்த மாபெரும் துரோகமாக அமையும்.

**துணை வேந்தருக்கு வேண்டுகோள்**

உலகப் புகழ்பெற்ற

உண்மை ஆராய்ச்சியில் நாட்டம்கொண்ட

துணைவேந்தர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்களிடம் உரிமையோடு கேட்கிறது—'மூலிகை மணி' ''உன்னதமான இந்தத் திட்டத்தினை உடனடியாக உரு வாக்க உதவுங்கள்''

உலக அரங்கில் 'சித்த மருத்துவஅறிவியல்' எனும் **'புதியதோர் அறிவியல்'** உங்கள் மூலம் உதயமாகட்டும்.

'புதியதோர் உலகம் செய்வோம்' என்று **'ஆனந்த ராகம்'** பாடிப் பறந்த பாரதிக் குயிலின் 'நூற்றுண்டு விழா' வைக் கொண்டாடும் இவ்வாண்டில்,

'தமிழ்ப் பல்கலைக் கழகம்' எனும் 'நல்லதோர் வீணை' யைத் —தமிழக முதல்வர் உங்களிடம் தந்துள்ளார்.

தாங்கள் இந்த வீணையை மீட்டும்போது எழும் நாதத்தி லிருந்து—

'சித்த மருத்துவ அறிவியல்' எனும் **அபூர்வ ராகம்** பிறக் கட்டும்!

உலக அரங்கில் 'புதியதோர் அறிவியலாக' அது வலம் வரட்டும்;

பாரதி நூற்றுண்டி-ல்மூலிகை மணி தரும் இந்தப் புதிய சிந்தனையே இன்று 'வேண்டுகோளாக' இதன்மூலம் மலர் கின்றது.

'இன்று மலரும்' இந்த வேண்டுகோள் தங்கள் முயற்சி யால் **சித்தமருத்துவம்** விரைவில்

'என்றும் வளரும்' என்ற நம்பிக்கையில்,

தங்கட்கு உறுதுணையாக, 'மூலிகை மணி' எப்போதும் உதவும் என்று உறுதி கூறுகிறது.

வாழ்க சித்த மருத்துவம்! வளர்க தங்கள் பணி!!

# -: கண்டதும் - கேட்டதும் :-

## 400 வயது வாழ ஆசைப்பட்டார்

அருணாசலப் பிரதேசத்தின் வடமேற்குக்கோடியில் இருக்கிறது டவாங். அங்குள்ள பௌத்த மடாலயத்தை நான் அடைந்தேன்.

அந்த லாமா இளைஞராயும் கட்டுமஸ்தான உடல் கொண்டவராயும் இருந்தார். சுத்தமான ஆங்கிலத்தில் பேசினுர்.

எனக்குத் தேனிர் கொடுத்து உபசரித்த பின்னர், ''ஜேம்ஸ் ஹில்ட்டன் எழுதிய 'ஷாங்ரீலா' என்ற நாவலைப் படித்திருக்கிறீர்களா நீங்கள்?'' என்றேன்.

''ஆம்! இரண்டு தடவை படித்திருக்கிறேன்.'' என்றேன்.

அவர் கூறினுர்:

''ஷாங்ரீலா என்றெரு மர்மமான பள்ளத்தாக்கு இமயமலைப் பகுதியில் இருக்கிறதென்றும் அங்குள்ள மக்கள் பல நூறு வருடங்களுக்கு வாலிபமாகவே வாழ்கிறுர்கள் என்றும் அதில் எழுதி இருக்கிறதல்லவா? அது உண்மை. திபெத்தில் அப்படியொரு பள்ளத்தாக்கு இருக்கிறது. அதற்கு ஷாங்ரீலா என்ற பெயர்தான் இல்லை. மற்றபடி மூப்பே அடையாத மக்கள் அங்கே வசிக்கிறுர்கள். பல வருட காலமாக அந்த இடத்தைக்கண்டுபிடிக்கச் சீனர்கள் முயன்று வருகிறுர்கள். முபபது ஆண்டுகளாக விமானத்தின் மூலம் ரோந்து பார்த்தும் நில மார்க்கமாக நடந்தும் தேடி வருகிறுர்கள்.

இருபது ஆண்டுகளுக்கு முன்பு அந்த அதிசயப் பள்ளத்தாக்கைச் சேர்ந்த ஒரு லாமா லாசாவுக்குச் சென்றபோது சீனர்களிடம் பிடிபட்டார். டாக்டர்களும் விஞ்ஞானிகளும் அவரை ஆராய்ந்து, அவருக்கு 400 வயதாகிறதென்றும் ஆனுல் உடலளவில் 40 வயதுக்காரராக இருக்கிறுரென்றும் சொன்னுர்கள். சீனர்கள் அவரை எவ்வளவோ சித்திரவதை செய்தார்கள். அவர் அந்தப்பள்ளத்தாக்கு இருப்பிடத்தைத் தெரிவிக்கவில்லை. மாசேதுங்கிற்கு வெகு ஆத்திரம். சீனப்புரட்சியை நிலை நிறுத்துவதற்காக இன்னும் சில நூறு வருடங்கள் வாழவேண்டுமென்று அவர் ஆர்வம் கொண்டிருந்ததால் எப்படியாவது அந்தப் பள்ளத்தாக்கைக்கண்டுபிடிக்க வேண்டுமென்று பார்த்தார். கடைசியில் அவரை விடுவித்து விட்டால் தன் ஊருக்குத் திரும்புவார் என்றும் ரகசியமாகப் பின்தொடர்ந்து கண்டுபிடித்துக் கொள்ளலாம் என்றும் திட்டமிட்டார். அவரை விடுவித்தார்கள். ஆனுல் அவர் தனது மர்மப் பள்ளத்தாக்குக்குப் போகாமல் இங்கே டவாங்கிலுள்ள மடாலயத்துக்கு வந்து, நடந்ததைச் சொன்னுர். அவரைப் பிடிப்பதற்காகவே சீனர்கள் இங்கே படையெடுத்து, அது இந்திய-சீனப்போராக வளர்ந்துவிட்டது. அந்த லாமா தன் ஊருக்குப் போவதற்காகக் குதிரையேறிச் சென்றுர். ஆனுல் குதிரையிலிருந்து விழுந்ததில் இறந்துவிட்டார்.

— நன்றி 'குமுதம்'

# சித்தர்கள் சொல்வதைக் கடைப்பிடித்துப் பாருங்கள்

சித்த வைத்தியமோ, ஆயுர்வேதமோ சொல்லாத எதையும் அலோபதி சொல்லிவிடவில்லை. புதிதாக மேலும் சில விஷயங்களை அது கண்டுபிடித்திருக்கலாமேதவிர, முற்றிலும் சித்த வைத்தியத்தை அது புறக்கணித்துவிட முடியாது.

சர்ப்பகந்திச் செடியில் இருந்து, 'சர்பாஸில்' தயாரிக்கின்ற அலோபதிக்கு, சித்த வைத்தியம்தான் தாய்.

தேரையர் பாடலிலும், பிற சித்தர்கள் பாடலிலும் சில செய்திகள் காணக்கிடக்கின்றன.

தூங்கும்போது இடதுகையில் தூங்கினுல், இருதயம் பத்திரமாக இருக்கிறது.

ஆறு மாதங்களுக்கு ஒரு முறை பேதி ஆவதற்கும், மூன்று மாதங்களுக்கு ஒருமுறை வாந்தி வருவதற்குமே மருந்து சாப்பிடச் சொல்கிறது ஒரு பாடல்.

'நீர் சுருக்கி, மோர் பெருக்கி நெய் உருக்கி உண்பவர்தம் பேருரைக்கிற் போமே பிணி' என்கிறது ஒரு பாடல்.

தண்ணீரைக் கொதிக்க வைத்து, பின் ஆறவைத்துச் சாப்பிட வேண்டும்; மோரில் வெண்ணெயை முழுக்க எடுத்து விட்டு நிறையத் தண்ணீர்கலந்து நீர் மோராகச் சாப்பிடவேண்டும்; நெய்யைக் கெட்டியாகப் போட்டுக்கொள்ளக்கூடாது.

'ஆவாரை பூத்திருக்கச் சாவாரைக் கண்டதுண்டோ' என்கிறது ஒரு பாடல்.

ஆவாரையில் பொன்னுவாரையே சிறந்தது. இது கிராமங்களில் எங்கும் கிடைக்கும். பொங்கலுக்கு உபயோகப்படுத்தும் மங்கலப் பொருள் இது.

காம்பு இலை சேராமல் இந்தப்பூவைக் கிள்ளி எடுத்துக் கூட்டுக் கறி வைத்துச் சாப்பிடலாம். காயப்போட்டு இடித்து டிகாக்ஷன் இறக்கிப் பாலில் கலந்து சாப்பிடலாம். ஆவாரம்பூ காப்பியில் ஆயுள் நீடிக்கும்.

உடம்பு பருமனுக உள்ளவர்கள் தினமும் வாழைத்தண்டோ, கீரைத்தண்டோ சேர்த்துக்கொண்டு வந்தால், பின்னுளில் 'கிட்னி' தொல்லை வராது.

—அரசவைக் கவிஞர் கண்ணதாசன் 'கல்கி'

# அவுரித் தைலம்

(சந்தா, வாசக அன்பர்களுக்கு மட்டும்)
பொது விற்பனைக்கு உரியது அல்ல

**பொடுகு, பேன், சொறி, சிரங்கு முடிகொட்டுதல்**
**இள நரை, போன்ற குறைகளைப் போக்கி**

கருமேக வண்ணத்தையும் கூந்தலுக்கு அளிக்கிறது.
பயன்படுத்துவோர் அனைவரும் மனந்திறந்து
பாராட்டுகின்றனர்

பதினெட்டு மூலிகைகளின் சாறுகளைக்கொண்டு தயாரிக்கப்பட்ட தைலம், '**அவுரித்தைலம்**'

ஆண், பெண், இளைஞர் முதல் குழந்தைகள் அனைவருக்கும் ஏற்றது. அன்றாடம் பயன்படுத்தலாம்.

100 **ML** அளவுகொண்ட ஒரு பாட்டில் விலை ரூ. 10, அஞ்சலில் பெற ரூ. 15- மட்டும். கீழ்க்கண்ட முகவரிக்கு **M. O.** அனுப்பிப் பெறலாம்.

---

'**மூலிகைமணி தயாரிப்பு**' பாலாஜி அவின்யூ, 2வது தெரு,
தி. நகர், சென்னை-600017,

---

அண்ணல் காந்தி கூறுகிறார் !

இயற்கை நமக்கு அளித்துள்ள மூலிகைகளை முறையாகப் பயன்படுத்தத் தெரிந்தால், தீராது என்று மேல் நாட்டு வைத்தியர்கள் கைவிட்ட பல நோய்கள் கூடத் தீரும் -

ஃ **பப்பாளிப்பழம் இரத்தத்தைச் சுத்தப்படுத்துகிறது**

ஃ **வாழைப்பழம் இரத்தத்தை அதிகரிக்கச் செய்கிறது**

ஃ **ஆரஞ்சுப் பழத்தைப்போல் 6 மடங்கு சத்துள்ள மலிவானப்பழம் கொய்யாப்பழம்**

தகவல்— **எல். நஞ்சன்**

---

# மூலிகைச் செல்வம்

—திருமதி மா. அமிர்தவல்லி மாணிக்கவாசகம்

மூலிகைச் செல்வங்கள் பாரீர் - நம்
மூத்தோரின் சொற்களைக் கேளீர் !
காலில் மிதிபடும் செடிகள் - வரும்
காலனை எதிர்த்திடும் வெடிகள்

குப்பைமேனி என்றொரு செடியுண்டு - அது
செய்திடும் மருத்துவம் மிகவுண்டு
கோழைக்கு எதிரி தூதுவளை - நம்
குடும்பத்தின் தெய்வம் துளசியிலை

(மூலிகை)

வாதத்தை அடக்கிடும் முடக்கத்தான் - நல்
வாழ்வுக்கு வேண்டுமே முருங்கைதான்
கேசத்தை வளர்த்திடும் மருதோன்றி - நற்
செரிமானம் உண்டாக்கும் வெற்றிலை

(மூலிகை)

கண்ணுக்கு நன்மை செய்யும் கரிசலாங்கண்ணி-மஞ்சள்
காமாலைக்கும் மருந்தாகும் கரிசலாங்கண்ணி
தினமும் பல்துலக்க கரிசலாங்கண்ணி - தொண்டை
கபத்தை அறுத்துவிடும் கரிசலாங்கண்ணி

(மூலிகை)

குடல் புண்ணை ஆற்றிடும் குணமுண்டு - அது
மணத்தக்காளி எனும் கீரைக்குத்தான்
சிறுநீரைப் பெருக்கிடும் சிறுகீரைக்கு - கால்
வீக்கத்தை வாங்கிடும் சக்தியுண்டு

(மூலிகை)

# கண்ணப்பரின் மூலிகை மருத்துவம்



தொகுப்பு : சிந்தில் கொடியோன்.

## ஆஸ்துமா இருமலுக்கு

இஞ்சி கால் பாகம், வெள்ளெருக்கன் பூ 3, மிளகு 6 இவைகளை நசுக்கி இரண்டு குவளை நீர் விட்டுக் காய்ச்சி ஒரு குவளையாகச் சுண்டவைத்து வேளை ஒன்றுக்கு அரை குவளையாகக் குடித்துவர சுவாசகாசம், இரைப்பு, சுவாச இருமலுக்கும், சளி நுரையீரலில் அடைத்து வெளியேருமல் தொல்லை கொடுக்கும்போதும் இந்தக் காஷாயத்தைக் காலை மாலை நோய் தீரும் வரை கொடுக்கலாம்.

## ஐந்தீ சுடர் மருந்து

சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலம் இவைகளைச் சுத்தம் செய்து சம எடை எடுத்து வெய்யிலில் உலர்த்தி இடித்துத் துல்லியமாகத் தூள் செய்து ஒரு புட்டியில் வைத்துக் கொள்க. அளவு 10 முதல் 20 அரிசி எடை தேன், நெய், வென்னீர் ஆகிய துணைக்கொண்டு காலை மாலை இருவேளை பித்தநாடி மிகுந்தபோது காணும் அதி உஷ்ணம் மார்பு எரிச்சல், பக்கசூலை, அனல் வாய்வு, பித்த புளியேப்பம், வயிற்றுப்புசம், பசியின்மை, வரட்சி ஆகியவைகள் ஐந்தீ சுடர் பட்ட மாத்திரம் தீயில் பட்ட பஞ்சுபோல் பறக்கும்! இதைத்துணை மருந்தாக அமைத்து சண்டமாருத செந்தூரம், ஆறுமுக செந்தூரம், அயம், காந்தம் முதலானவைகளுக்குச் சமயோசிதம் போல் சித்த மருத்துவர்கள் கையாண்டு நீடித்த பல நோய்களைத் திறமையாகப் போக்கிவிடுவார்கள். இம் மருந்தை 'பஞ்ச தீபாக்கினி' என்று கூறுவார்கள்.

## பல் ரோகப் பொடி

சுக்கு, காசிக்கட்டி, கடுக்காய்த் தோல், இந்துப்பு இவைகளைச் சமமாக எடுத்துலர்த்தி இடித்துத் தூள் செய்து வைத்துக்கொண்டு சதா பல்லில் எகிறுகளில் இருந்து இரத்தம் கசிந்துக்கொண்டு இருக்கும் அன்பர்கள், சிரித்தால் பல்லில் இரத்தம் வருபவர்கள், பல் ஆட்டம், பல் சொத்தை ஆகிய தொல்லைகளில் கஷ்டப்படுவோர் இந்தத் தூளை காலை மாலை இரண்டு முறையும் பல் துலக்கி வர இவை யாவும் ஒழிந்துபோகும்.

## காணுக் கடி விடம் நீங்க

பராசக்தி என்ற வேம்புக்கு அடுத்தபடியாக 100 வருட மரங்களில், காயகல்பமாக சிகிச்சைக்கு பயன்படக்கூடியது இந்தப் பூவரசன். பூவரசனைப் பற்றி நாம் நினைக்கும்போது முழுக்க முழுக்க சர்ம ரோகங்களைத்தான் சிறப்பாகக் கொள்ள வேண்டும். அங்கமெல்லாம் அழுகும் தொழு நோயையும் போக்கிவிடும்.

''நூருண்டு சென்றதொரு நுண்பூவரசம் வேர்
நூருண்டு குட்டந் தொலைக்கும்—காண்
வீறிப் பழுத்த இலை, விதை, பூ, பட்டை இவை
கண்டால் புழுத்த புண் விரேசனமும் போம்''

(கு. மு.)

பூவரசனைப் பார்த்தாலே நோய் விலகும் என்று—என்றும் உள தென் தமிழை இசைத்த முனிவர் பாடியுள்ளார்.

தமிழைத் தந்தவன் வாக்கில் தவறு இருக்காதல்லவா?

மரப்பட்டையை 300 கிராம் அளவு இடித்து நாலு குவளை நீர் விட்டு மண் கலயத்தில் காய்ச்சி ஒரு குவளையாக்கி அதனைத் தினம் இரு வேளை குடிக்க உடம்பில் இன்ன விடக் கடி என்று கூறமுடியாத விடக்கடி யெல்லாம் மறைந்து விடும். மகோதரம், பாண்டு, சோகை, வயிறு வீக்கம், போன்ற கொடிய நோய்களும் கடிதில் நீங்கும்.

## தலைப்பொடுகு ஒழிய

பொடுதலையை வேருடன் எடுத்து(பூ, காய் உள்பட) அலசி நன்ருக உதறிவிட்டுக் கல்உரலில் மரஉலக்கையால் இடித்துச் சாறு பிழிந்துகொள்ளவும். எவ்வளவு சாறு வருகிறதோ அவ்வளவு சுத்தமான எள் எண்ணெயுடன் கலந்து அடுப்பில் வைத்துச் சிறு தீயாகக் கொதிவராமல் காய்ச்ச வேண்டும். அப்படிக் காய்ச்ச வெகுநேரம் பிடிக்கும். சாறு எல்லாம் சுண்டக் காய்ச்சி வாரம் இருமுறை தலையில் தேய்த்து தலை முழுகி வர தலையைப் பற்றிய சர்மரோகம் யாவும் ஒழியும். தலைப்பொடுகு கண்டவர்கள் உபயோகித்து நற்பயன்கண்டு வாழ்த்தியதால் இதற்குப் பொடுதலை என்ற பெயர் வந்ததாகச் சிலர் கூறுவர்.

''பொடுதலையின் பேருரைத்தால் பேராமம் போகும்
அடுதலைச் செய் காசமும் அடங்கும்—கடுகிவரு
பேதியோடு சூலை நோய் பேசா வெண்மேகம்
வாதமும் போ மெய்யுரைக்கும் வாழ்த்து.''
(கு.மு.)

என்று அகத்தியரே நாவால் வாழ்த்துகிருர் என்ருல் பொடுதலையின் சிறப்பைப் பற்றி கேட்க வேண்டுமா?

—தொடரும்

---

## வாசகர்கள் ஏஜெண்டுகள் கட்டுரையாளர்கள் கவனிக்க !

*'மூலிகைமணி' இதழில் வெளியிட மூலிகை மருத்துவ ஆராய்ச்சிக் கட்டுரைகள், சித்தர்கள் வரலாறு, சித்த மருத்துவ ஆராய்ச்சிக் கட்டுரைகள், 'நோயும்-மருந்தும்' பகுதிக்குரிய வாசகர்களின் நோய் பற்றிய வினுக்கள், 'இதயஒலி' கடிதங்கள், 'அனுபவம் உணர்த்தும் உண்மை' போன்ற அனைத்துக் கடிதங்களையும், மருத்துவ தொடர்புள்ள கட்டுரைகளையும், சந்தா புகார், தனிப்பட்ட மருத்துவ* **ஆலோசனைக் கடிதங்களையும்'**, *கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறோம்.*

க. வேங்கடேசன்,
**9, கிளப் ரோட் கிழக்கு,**
**செனுய் நகர், சென்னை-30.**

## அனுபவம் உணர்த்தும் உண்மை!

டாக்டர் க, வேங்கடேசன் அவர்கட்கு, குறிஞ்சிப்பாடி செல்வராஜ் வணக்கமாய் எழுதும் கடிதம். தாங்கள் அனுப்பிய மருந்துகள் அனைத்தும் சாப்பிட்டேன். உடல் இப்போது நன்கு தேறி நலமாகவே உள்ளது. மூலிகை மருத்துவத்திற்காகத் தாங்கள் ஆற்றும் சேவை ஒப்பற்ற சேவையாகும். தொடர்ந்து வெற்றிபெறுங்கள்.

A. செல்வராஜ், செல்வம் ஸ்டோர்ஸ், குறிஞ்சிப்பாடி

## மூலிகை மருத்துவ ஆலோசனை

- ஆஸ்துமா
- குன்மம்
- சர்மநோய்
- வெண்புள்ளிகள்
- ஆண்மைக் குறைபாடுகள்
- உடல் வளர்ச்சி இன்மை

இவைகளால் துன்பப்படுபவர்கள்—மூலிகை மணி ஆசிரியர் **க. வேங்கடேசன்** அவர்களின் அரிய அனுபவ மருத்துவ ஆலோசனைகள் மூலம் நிவாரணம் பெறலாம்.

நேரிலும், அஞ்சல் வழியும் ஆலோசனை பெறலாம். அஞ்சலில் ஆலோசனை பெற 35 காசு தபால்தலை அனுப்புக.

முகவரி: **மூலிகை மணி அச்சகம்,**
9. கிளப் ரோட் கிழக்கு, செனாய் நகர், சென்னை-6000 30.
எனும் முகவரியில் காலை 9 முதல் மாலை 6 மணி வரை சந்திக்கலாம்.

சனி, ஞாயிறு ஆகிய இருநாட்களிலும் சென்னையில் 22, **திருமலைப்பிள்ளை வீதி, பாலாஜி அவின்யூ II, தி. நகர்.** என்ற முகவரியில் **கண்ணப்பரின்** இளைய மகன் **க. பாபு** அவர்களிடம் மருத்துவ ஆலோசனை பெறலாம்.

# 19-பாஷாணச் சரக்குகளில் முப்பு சேர்க்கை செய்பாகம்

முன் கட்டுரையில் கூறிய ஜெயநீர்வடித்த இரண்டு குப்பிகளிலு மிருந்த ஆடையைச் சேதப்படுத்தாம லெடுத்துப் பீங்கான் தட்டையில் வைத்து ரவியில் வைக்கவும். நன்ருய் ஈரம் உலர்ந்தவுடன் அதில் கொஞ்சம் பச்சைக் கற்பூரம் நுணுக்கிப் போட்டுக் கிளறி கடும் ரவியில் வைக்கக் கருஞ் சிகப்பானத் தைலம் வடியும்; தைலம் சுத்தமாக வடிந்த பின், முன்பஞ்ச பூத நீரில் பிரித்த ஆடையிலிருந்து வடித்த தைலத்துடனிந்தத் தைலத்தைக் கலந்தும் முன் தைலம் வடித்தச் சக்கையான மெழுகுடனித் தைலம் வடித்த மெழுகையுங் கலந்துத் தைலமும்மெழுகும் பத்திரப் படுத்தவும். இத்தைலத்திற்கு தலைமைந்தன் தைலம், பிண்டத் தைலம், ஐங்கோ தைலம் எனப் பற்பல பெயர்களுண்டு. இதில் மாந்திரீகஞ் செய்யப் பல விதமாகப் பிரிந்து செய்ய உதவும். நிற்க முன் கட்டுரையில் கூறியுள்ள ½ அவுன்ஸ் 7ம் நாள் வஸ்த்து மட்டும் தனியாக எடுத்து வைத்துள்ளதில் ¼ அவுன்ஸ் மட்டும் எடுத்து ½ படி பஞ்சபூத ஜெய நீரில் கலந்து நன்ருய் குலுக்கி சற்று உயரமாகவும், வாய் சற்று குறுகலாகவும் உள்ளப் பீங்கான் பாத்திரத்துள் விட்டு அதில் வெடியுப்பு விராகன் 1, பூச்சூடம் பலம் 1, பூரம்பலம் 5, சீனக்காரம் 3 வீரம் பலம் 3 ஆக சரக்குகள் 5 கல்வத்திலிட்டுத் தனித் தனியாக, மயனமாய் நுணுக்கி ஒன்ருய்கலந்து க்ஷ ஜெயநீர் பீங்கானுள் போட்டு நன்ருய் கரையும் படி குலுக்கிப் பின் பீங்கான் வாய் பொருந்த பீங்கான் மூடி அதற்கு மண் சீலை 7 செய்துலர்த்தி, முன் முப்பு ஜெய நீர் சமாதி வைத்த இடத்திற்கு அருகிலேயே புதைத்து 48 நாள் சென்ற பின் எடுத்துப் பார்க்க யாவுஞ் ஜெய நீராக இருக்கும்.

இச் ஜெய நீரைக் கலங்காது ஒரு பீங்கான் தட்டையில் ஊற்றி இத் தட்டையை உயரமான இடத்தில் தூசுகள் விழாது ஜாக்கிரதையாகக் கடும் ரவியில் வைக்கவும், ஜெய நீர் வடித்தப் பீங்கானின் அடியிலிருக்கும் குழம்பில் ¼ படி பஞ்சப்பூத ஜெயநீர் விட்டு நன்ருய்க் கறைத்து அப்படியே ஓர் நாள் காற்றடிக்காத மூலையில் மூடி வைத்து மறு நாளெடுத்து அசையாமல் மேல் நிற்கும் ஜெயநீரை முதல் நாள் வடித்த ஜெய நீர் தட்டையில் வடித்து நன்ருய் உலர்த்திக் கொள்ளவும்.

இவ்வாறே பின்னும் இரண்டு தடவை முன் போல் கரைத்து, கரைத்தத் தெளிவையிறுத்து உலர்த்திப் பார்க்கச் சற்றுப் பழுப்பு நிறமான உப்பாயிருக்கும். பத்திரப்படுத்தவும். நிற்க ......................

முன் வீட்டிற்குள் சமாதி வைத்தப் பூ ஜெய நீரான மதிரவி கலந்த வஸ்த்துவை சமாதி வைத்த 25ம் நாள் பய பக்தியுடன் சமாதி திறந்து ஜாக்கிரதையாயெடுத்துப் பார்க்கக் கெட்டியான தயிர் போன்று சிறிது ஜெய நீருடனிருக்கும். இல்லையேல் அரைப்பாகம் மட்டும் கெட்டிப்பட்டிருந்தால், மறுபடி முன் போன்று சமாதிக்குள் வைத்து மூடி 24 நாள் சென்றெடுக்கக் கெட்டிப்பட்டிருக்கும். இதை வாய் சீலைப் பிரிக்காது, ஒரு பீங்கான் தட்டை மீது க்ஷ பாட்டிலை வைத்து உயரமான பலகை மேல் வைத்து கடும் ரவியில் வைக்கவும். வெய்யி லின் தன்மையையொத்து, 7,5,3, நாட்களுக்குள் வெண்மையானக் கெட்டிப் பொருளாக இருக்கும்.

எக்காரணங் கொண்டும் சமாதி வைக்கும் போது செய்த குப்பி யின் வாய்ச் சீலையைப் பிரிக்கக் கூடாது. தவிர அடிக்கடித் திறந்து வெளிக் காற்று படாமலும், நம் கை நகங்கள் படாமலும் பாது காக்க வேண்டும். இவ்வஸ்த்து வேறொரு பொருளுடன் கலந்தால் தான் நிலைத்து நிற்கும். இல்லையேல் ஆவியாக (வாயுவு) மாறுந் தன்மையுடையது, இவ்வஸ்த்துவே 16 கலைகளுடனமைந்த பூரண மாகிய விநாயகயெனும் பஞ்சதீக்ஷையாகியமுப்பூ. இதன் விவரம் விளக்கமாக பின்வருங் கட்டுரைகளில் கூறுகிறேன். பாஷாணங்களில் முப்பு செய்பாகஞ் செய்யச்சான்று... ..............போகர்கல்ப சூத்திரம் 18க்குத் துணையான சூத்திரம் 13ல் 7வது பாடல் 6 வது வரி முதல்

...தேனுன விழிமடவர் பூத்த நாளில்
சிறப்பாகப் போகித்து நாதம்வாங்கே
வாங்கியந்த நாதத்தில் வீரம் பூரம்
மகத்தான செவிநஞ்சுக் கூடப்போட்டு
பாங்காகத் தெளிந்தங்கே யாடை பார்த்து

பதராம லாடையைத் தானெடுத்துப்போடு
ஓங்காரக் கம்பமென்ற ஆத்தாள் நாதம்
உத்தமனே ரவியில்வைக்க உப்பதாச்சி
நீங்காம லிருக்குமடா வாதசித்தி
நிமிடத்தி லண்டரெண்டம் நிதியுமாச்சே...

என்றும்

10-வது பாடலில்

காணவென்று மனமுறைத்தா லுப்பைநீயும்
கைகண்ட நாதஜலம் விட்டுஆட்டு
வேணமட்டும் அஞ்செழுத்துக் கவசம்போட்டு
விள்ளாதேச் சுண்ணமதை யார்க்கானாலும்
பானமென்ற பானமடாச் சரக்கைக் கொல்லும்
படுமுன்னே சுண்ணமதாய்ப் பண்ணுவிக்கும்
கோணுதபடி நீதான் ரவியில் வைத்துக்
கொடுஞ்சுண்ண மாக்கியதைச் சூக்ஷிப்பாயே...

என்கிருர். ஆனுல், வீரம், பூரம் என்று கூறி, செவி நஞ்சு எனப் பரிபாஷையாகவும் விளங்காமலும் சரக்குகள் எடை பாகமுங் கூறப் படவில்லை 10வது பாடலில் அஞ்செழுத்தை க்ஷ உப்புக்குக் கவசம் போடக் கூறுகிருர். ஆனுல் அஞ்செழுத்து எனும் பஞ்ச பூதம் ஒன்ருன வஸ்த்து எது என்ற விவரம் கூறவில்லை. இதன் விவரம் ரோமரிஷி 500ல் வாதத்துக்கு ஆதியுப்பு எனுந் தலைப்பில் 31வது பாடல் 5 வரியிலிருந்து......................

ஊனென்ற நாதமடாப் பீங்கானுள்ளே
உத்தமனேக் கொண்டுவந்துச் சொல்லக்கேளு
பானென்ற ரவிப்பீஜம் விராகனென்று
பதமாகப் பொடித்திட்டுச் சொல்லக்கேளே.

32. கேளடாச் சூடனது பலந்தானென்று
கெட்டியாப் பூரமதுப் பலந்தானைந்து
வாளடா சீனமதுப் பலந்தான்மூன்று
மயங்காதேக் கொச்சியென்ற வீரம்மூன்று
தூளடா செய்துநீ பீங்கானுள்ளே
சுரோணிதத்தில் கலக்கியேச் சொல்லக்கேளு
பாளடாப் போகாமல் சீலைமண்செய்து
பக்குவமாய் குழிவெட்டிப் புதைத்துப் போடே

33. போடுநீ பக்ஷமதுக் கடந்துதானுல்
பூரணியைப் பூஜைபண்ணியப் பால்வாங்கே
ஆடுநீ கோடிவித்தை யிந்தநீரில்
அம்மம்மா ஆச்சரிய மாபிநாதம்
ஓடுநீயிந்நீரை ரவியில் வைக்க
ஓகோகோ உப்பாகு முண்மைச் சொன்னேன்
சூடேநீ யிந்தவுப்பைக் கண்டபோதே
சுரூபமென்ற சித்தியெல்லாங் கைக்குள்ளாச்சே.

—தொடரும்,

## ஆசிரியர்க்குக் கடிதம்

ஐயா,

தாங்கள் ஐந்தாவது உலகத் தமிழ்மாநாட்டில் நடத்திய அரும் பெரும் சாதனையை மூலிகை மணி கருத்தரங்கு சிறப்பு மலரில் கண்டு மகிழ்ந்தேன்.

தாங்கள் 10 ஆயிரம் செலவழித்துப் பெரியவர் கண்ட கனவினை நினைவாக்கியதையும் அவருடைய ஆத்மாவும் கருத்தரங்கில் கலந்து கொண்டதாக அவரே தங்களிடம் கூறியதுபோன்ற வரிகளைப் படிக்கும்போது என் கண்கள் பனித்தன.

தங்களதுதொண்டு நீண்டு வளர எங்களால் இயன்ற அனைத்து ஒத்துழைப்பையும் தரக் காத்திருக்கிறோம். நான் இனி செல்லப்போகும் வெளி மாநிலங்களில் மூலிகை மணியைப்பற்றி நம் தமிழர்களுக்கு எடுத்துக் காட்டி அனைவரையும் உறுப்பினர்களாக்குவேன்.

ஐ. இராலிங்கம்,
வெள்ளாண்டி. வலசை அஞ்சல்,
சேலம் மாவட்டம்,
637105.

ஐயா,

இணைப்புமலர் உலகத்தமிழ் மாநாட்டின்போது நடந்த நமது மூலிகைமணி கருத்தரங்கு நிதழ்ச்சினைத் தொகுத்து மதுரை விற்பனையாளர் புகைப்படம் வெளியிட்டுத் தங்களது நன்றிக் கருத்துகளை வெளியிட்டு எங்களைக் கௌரவித்தமைக்கு எங்களது மனமார்ந்த நன்றியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த இதழ்மலர் அமைப்பு மிக மிக சிறப்பாகவே அமைந்துள்ளது.

மதுரை சித்ரா நியூஸ்ஏஜன்ஸி
மதுரை—625 001.

ஐயா,

தாங்கள் தமிழ் மக்களுக்காக ஆற்றிவரும் 'குறிப்பாக' ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டில் சுவைபட இனிய ஆய்வரங்கம் நடாத்தி மாண்புமிகு சித்த மருத்துவத்திற்கு மறுமலர்ச்சியைத் தோற்றுவித்து வாசகர்கள் மற்றும் பார்வையாளர்களை மகிழ்வித்தத் தங்கள் பணி மிக்க சிறப்பிற்குரியது. வளர்க தங்கள் பணி! வாழ்க சித்த மருத்துவம்!!

கோ. அசோகன்.

ஐயா,

பிப்ரவரி – ஆகஸ்டு இணைப்பிதழில் (ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பிதழ்) கிடைத்தது மதுரைமாநாட்டிற்குவரவில்லையே என்ற ஆசை அடங்கியது. படங்

களுடன் மிக அருமையாக இருந்தது. குடத்துக்குள் இருந்த விளக்கைப்போல் அல்லாமல் குன்றின்மேலிட்ட விளக்கைப் போல் தமிழ் சித்த வைத்தியத்தின் பெருமையை மக்கள் உணரும் காலம் நெருங்கிவிட்டது. அறியாமையான இருளைப் போக்கும் விளக்கென மூலிகைமணி திகழ்கிறது. எத்தனையோ சிரமங்களுக்கு இடையில் தாங்கள் ஆற்றும் பணி மிகச் சிறந்ததென யாவரும் அறிவர்.

தங்கள் பணி தொடர எனது வாழ்த்துக்கள்.

T. A. ரகுநாதன்,
4. மாரியம்மன் கோவில் தெரு,
காசிவிஸ்வநாத நகர்,
திருச்செங்கோடு - 637 211.

ஐயா,

தமிழகமக்களுக்கு மூலிகைமணி ஆற்றிவரும் சேவை மகத்தானது. இந்தச் சேவையை தமிழகமக்கள் முழுதும் பயன்படுத்திக் கொள்ள முன்வர வேண்டும், அந்த எண்ணத்திலே தான் மூலிகை மணிக்கு நான் சந்தாசெலுத்தியுள்ளேன். சந்தாதாரர் ஆவதன்மூலம் அதன் வளர்ச்சிக்கு உதவுகிறோம்; அதன் வளர்ச்சியினால் தமிழக மக்கள் பயன் பெறுகிறார்கள்'', என்ற மன நிறைவு எனக்குண்டு.

தங்கள் சேவையும், மூலிகை மணியின்வளர்ச்சியும் மேன்மேலும் பெருக! என வாழ்த்துவதில் உள நிறைவும், மகிழ்ச்சியும் அடைகிறேன்.

கே. கண்ணபிரான்,
வெள்ளகோவில்.

ஐயா,

மூலிகைமணி இணைப்பிதழ் படித்தேன். பயனுள்ள கட்டுரைகள்! காலம் காலமாக வீட்டில் வைத்துப் போற்றப் படவேண்டிய கட்டுரைகள் இடம் பெற்றிருந்தன.

பொ. ஜெயராஜ்,
அறிவியல் ஆசிரியர்,
ஜமாலியா உயர்நிலைப்பள்ளி,
சென்னை - 600012.

# நம்நாட்டு மூலிகைகள்



## குங்குமப்பூ (SAFFRON)

## CROCUS SATIVUS

273—வது மூலிகை

---

மூலிகை உலகிலே புகுந்துவிட்டால், வண்ண வண்ணச் செடி கொடிகளின் கொள்ளை அழகு மனதைப்பறிக்கும். அதுவும் இயற்கை அழகு மண்டிக்கிடக்கும், இமயத்தின் அடிவாரத்திலும், சரிவிலும் பயணம் மேற்கொண்டால், சொர்க்க பூமியில் வாழ்கின்ற பிரமை நிச்சயம் உண்டாகும். அதிலும் காஷ்மீருக்குச் சென்ருல், மீண்டும் வீட்டுக்குத் திரும்ப வேண்டுமே என்ற எண்ணம் கொஞ்சமும் வராது.

மூலிகைவளம் - இயற்கையோடு பின்னிக்கிடக்கும் அழகில் நாமும் பிணைந்து விடுவோம். அந்த அளவுக்கு வளமான மூலிகை இனங்களைத் தன்னகத்தே கொண்டு - காண்போரைக் கவர்ந்திழுக் கும் ஆற்றல் வாய்ந்த காஷ்மீரத்தில் விலை யுயர்ந்த 'மூலிகை நங்கை' ஒருத்தி இருக்கின்ருள். மஞ்ஞளுடன்வாழும் மங்கையர் உள்ளத்தில் மங்காது இடம் பெற்ற இந்த 'மூலிகை நங்கை'யை விரும்பி அலையா தவர்கள், பயன் அடையாதவர்கள் யாரும் இருக்க முடியாது. எனலாம்.

'காஷ்மீரத்து நாயகி' என்றே இந்த நங்கையை அழைக்கலாம். குங்குமம் அணிந்து குடும்ப விளக்காய் வாழும் மங்கையர் மகப்பேறு அடைந்ததும் இந்த நாயகியை நினைத்து அதிக விலைகொடுத்து வாங்கிப் பாலுடன் கலந்து உண்பர். தவமிருந்து பெறப் போகும் தன் மைந்தன், 'குங்குமச் சிவப்பாய்' பிறக்கவேண்டும் என்று எண்ணி காஷ்மீரத்து நாயகியாம் 'குங்குமப்பூவை' தேடிப்பிடித்து விலை கொடுத்து வாங்கி, தினம் பாலில் கலந்து தன் நாயகிக்குப் பாசத் துடன் பருகுமாறு அளிக்கும் கணவனின் கருத்தில் இடம்பெற்ற மூலிகை 'குங்குமப்பூ'

வடமேற்கு நாடுகளில் காஷ்மீரத்தில் பயிராகும், சிறு செடி இனத்தைச்சார்ந்த, குங்குமப்பூவிற்கு, வடநாட்டில், 'காஷ்மீரம்' என்றே பெயர் வழங்கப்படுகிறது.

தமிழகத்திலும் பண்டைக்காலத்திலிருந்தே இது விளைந்திருக்கும் என்பதற்கு, ஆதாரம், இதன் பெயர் 'ஞாழல் பூ' என்பதிலிருந்து தெரியவருகிறது.

பொதுவிவரம் :

இந்தச்செடியின் பூக்களிலுள்ள மகரந்தத்தாள்களே-குங்குமப்பூ என்றழைக்கப்பெறுகிறது. 1 கிராம் விலை 400-க்கு மேற் விற்கப்படும் உயர்ந்த சாதிப்பூவின் மகரந்தத் தாளான குங்குமப்பூவினை-அசலாக பார்த்து வாங்கவேண்டும். விலை குறைவானவை போலியானவை. உண்மையானவை என்பதற்கு அடையாளம், இந்தத் தாளின் ஒரு பகுதியைக் கிள்ளி 1 குவளை நீரில் போட்டால், உடனே நீர்முழுதும் செம்மஞ்சள் நிறமாகிவிடும். தாள் மெல்ல மெல்ல கரைவதைக் கண்ணுரக் காணலாம். மணம் கமழும். மினுமினுப்பாய் இருக்கும்.

கைப்புச்சுவையுடன் கூடிய இது பொதுவாக உடலுக்கு வெப்பத்தினை அளிக்கக்கூடியதாகும். பசியைத் தூண்டும். சளி, இசிவு ஆகியன நீக்கும். வராமல் காக்கும். மாதவிலக்கை உண்டுபண்ணும். வலிகளைக் குறைக்க உதவும்.

## மருத்துவப் பயன் முறைகள்

விந்துக்குறைவு, நீர் வேட்கை, கணைச்சூடு, கபக்காய்ச்சல், தலைவலி, கண்நோய்கள், காதுவலிகள், தலைப்பாரம், கருப்பை அழுக்குகள் ஆகிய நோய்கள், இதன் மருத்துவக் குணத்தால் விலகுகின்றன. அத்துடன் பல்வகை உணவுப்பொருட்களில், மணமூட்டியாகவும், வண்ணமெருகூட்டியாகவும் பயன்படுகிறது.

## மகப்பேறு அடைந்த மகளிர்க்கு

மகப்பேறு உற்ற மகளிர், அசல் குங்குமப்பூவின் தாள் 2 முதல் 5 வரை எடுத்து பகல் உணவுக்குப்பின் வெற்றிலையோடு சேர்த்து உண்ணலாம். (அ) இரவில் பாலுடன் கலந்து பருகலாம். கருவமைந்த 5 மாதம் கழிந்தபின் தொடர்ந்து இதனை வாரம் 3 நாட்களாவது உண்டுவர, இரட்டைப் பயனைப் பெறலாம். பிறக்கும் குழந்தை குங்குமச்சிவப்பில் கொழுகொழுவென்றிருக்கும். தாய்க்கும், குளிர்ச்சி காரணமாக வரக்கூடிய சன்னிக்காய்ச்சல் வராது. தற்காலத்தில் 'டெட்டனஸ்' ஊசிபோல் அந்தக்காலத்தில் 'பிரசவ சன்னி' வராமல் காக்கும் மருந்தாகப் பயனாகியது, குங்கும்ப்பூ எனில் மிகையன்று. இன்றும் நடைமுறையில் பழக்கத்தில் உள்ளதைஉணரலாம். இதனால் பிரசவ வலிகளும் குறைந்து குழந்தை பிறந்தவுடன் கருப்பையில் தங்கும் அழுக்குகளையும் அகற்றும் தன்மை இதற்கு உண்டு. விலை உயர்ந்த அசல் குங்குமப்பூவிற்கு மட்டுமே இந்தக் குணம் உண்டு. 50 ரூபாய்க்கு விற்கும் குங்குமப்பூவை நம்பி, பயன் இல்லையே என்று கூறக்கூடாது. பசியின்மை, அஜீரணம், மலச்சிக்கல், கபக்கோளாறு ஆகியவற்றல், மகப்பேறுற்ற மகளிர் தொல்லை அடையாமல் காக்க உதவும், அரிய மூலிகை குங்குமப்பூ. அந்த வகையில், 'மகப்பேறுற்ற மகளிர்க்கு ஒரு தாதிபோல்' உதவுகின்றது என்றே குறிப்பிடலாம்.

## தலைபாரம் வலி ஜலதோஷம் மூக்கடைப்பு ஆகியன நீங்க

மண்டைப்பீனிசம், நுரையீரல் கபம் காரணமாக மழைக்காலத்திலும், குளிர்காலங்களிலும் அடிக்கடி தொல்லையுறும் ஆண், பெண், குழந்தைகள் அனைவருக்கும் துரித நிவாரணம் அளிக்கவல்லது 'குங்குமப்பூ'.

முறை விவரம் : சிறிது குங்குமப்பூவை எடுத்து கற்பூரம் சிறிது அளவு எடுத்து இரண்டையும்; தேங்காய் எண்ணெய் 20 சொட்டு விட்டு உரைத்து, தலையின் கன்னப்பொட்டு, நெற்றி மூக்கு கழுத்துப்புறங்களில் தேய்த்து விடவும். அரைமணி நேரத்தில், வலி குறையும். தலைபாரம் நீங்கும். மூக்கடைப்பு விலகும். தொடர்ந்து செய்து வர, மண்டைப்பீனிசமும் விலகும். இதன் கஷாயத்தைப் பனைவெல்லம் சேர்த்துப் பருகிவர நுரையீரல் கபம் விலகும்.

## மகளிரின் பேறு காலத்தின்போது

பேறுகாலம் வந்தவுடன் சோம்பு 2 சிட்டிகை எடுத்து அத்துடன் சீரகம் சிறிது, குங்குமப்பூ தாள் 10 எடுத்து இரு குவளை நீர்விட்டுக் காய்ச்சி வடிகட்டி சிறிது சர்க்கரை கூட்டிப் பருக வைக்கவும். விரைவில் சுகப்பிரசவமாகும்.

குழந்தை பிறந்தவுடன் 10 நாட்கள் கழித்துப்பின் அன்றுடம் வெற்றிலைப் பாக்குடன் 2 முதல் 5 தாள் சேர்த்து மென்று விழுங்கி வர, மகப்பேறு காரணமாக வரும்இரத்தப்போக்குச் சீர்ப்படும். தாய்க்கும், குழந்தைக்கும் சளி, காய்ச்சல் போன்ற தொல்லைகள் வராது.

மாதவிலக்கு சரிவராத மகளிர் இதனை மேற்சொன்ன முறைகளில் பயன்படுத்தி வர ருது உண்டாகும்.

மேகவெட்டையால், உடல் வறட்சியாகி, நீர்வேட்கை அதிகமாகும்போது, இதனைக் குடிநீராக்கிப் பருகிவர, உடல் வளர்ச்சி தணியும். வெட்டை எரிச்சல் போகும்.

கை கால் வலிப்புநோய் வந்தால், இதனைத் தேன்விட்டுக் குழைத்து நாக்கில் தடவிவர வலிப்புநோய் வந்தபின் ஏற்படும் வலிகள் வராது. வலிப்பு நோயும் படிப்படியாக குணமாகும்.

## விந்துக் குறைவு நீங்க

பெண்களுக்கு மட்டுமின்றி ஆண்களுக்கும் உதவும் நல்ல மூலிகை குங்குமப்பூ. ஆம், அடிக்கடி போக இச்சை காரணமாக விந்து வெளியேறி விந்துக்குறைவு நோயால் பாதிக்கப்பட்டவர்கள், அன்றுடம், அசல் குங்குமப்பூவைத் தாம்பூலத்துடன் தரித்துவர,(அ) இரவில் பாதாம்பருப்பு, முருங்கைப்பிசின், இவற்றுடன் கலந்து பருகிவர, விந்து உற்பத்திப்பெருகி, போக இச்சையில் நாட்டம் ஏற்படும்.

குறிப்பு : அதற்காக, இயல்பாக இச்சையுடையவர்கள், அதிக இச்சைக்கு ஆசைப்பட்டு, இதனைப் பயன்படுத்தினுல், உள்ளதும் போய்விடும். எச்சரிக்கை!. பலஹீனமானவர்களுக்கே இந்த முறை உதவும்.

## சித்த மருத்துவத்தில் குங்குமப்பூ மாத்திரை

பல நூற்ருண்டுகட்கு முன்னரே, 'குங்குமப்பூவை' மையமாகக் கொண்டு சித்த மருத்துவர்கள் 'குங்குமப்பூ மாத்திரை' என்ற பெயரில் மருந்து தயாரித்துத் தந்துள்ளனர்.

இந்த மாத்திரையைப் பயன்படுத்தி, ஆண்மைக்குறைவு, சன்னிக்காய்ச்சல், ஜலதோஷம், நுரையீரல் கபம் போன்ற குறைபாடுகளை நீக்கிக்கொள்ளலாம்.

குங்குமப் பூவைக்கண்டால் கூறுகொண்ட பீநசநோய்
தங்கு செவித்தோடஞ் சலதோடம்-பொங்கு
மதுரதோடந் தொலேயும் மாதர் கருப்ப
உதிரதோடங்களறும் ஓது'' (அ.கு)

எனவே, காஷ்மீரம்செல்லும் வாய்ப்புஏற்பட்டால், 'காஷ்மீரத்து நாயகி'யை எவ்வளவு விலைகொடுத்தும் வாங்கி வந்து இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டி வைத்துக்கொள்ளுங்கள். மகளோ, மருமகளோ, மகப்பேறு அடைந்தால், மெல்ல பெட்டியைத் திறந்து கொஞ்சம் குங்குமப்பூவை எடுத்து, சாப்பிடக்கொடுங்கள். பிறக்கும் பேரனே, பேத்தியோ 'குங்குமக்கலரில்' பிறக்கும். அப்புறம் என்ன? கொஞ்சி மகிழவேண்டியதுதானே!

---

## வாய்வுச் சூரணம்

மிகுதியான உணவு உண்டு அதனுல் வாய்வுத் தொல்லை ஏற்பட்டாலும், கை, கால், இடுப்புப் பகுதிகளில் வாய்வு காரணமாக பிடிப்பு வலி ஏற்பட்டு அவதிப்படுபவர்கள், 'வாய்வுச் சூரணம்' வாங்கிப் பயன்படுத்தினுல் அவை தீரும். 30 நாட்களுக்குரிய சூரணம் 1 பாக்கெட் விலை ரூ. 15-00. '**மூலிகைமணி தயாரிப்பு**' பாலாஜி அவின்யூ, 2 வது தெரு, தி. நகர், சென்னை-600017-எனும் முகவரிக்கு **M. O.** அனுப்பிப் பெறலாம். அஞ்சல் செலவு ரூ. 5/- சேர்த்து ரூ. 17/- அனுப்பவும்.

---

# சித்தர்கள் அருளிய சுதேச மருந்து

## சர்ம நோய் நீங்க

பூவரச மரத்தின் வேர்ப்பட்டை எடுத்து தூய்மை செய்து அரைத்து நெல்லிக்காய் அளவு எடுத்துக் கொண்டு, அன்றுடம் காலையில் வெறும் வயிற்றில் 1 குவளை சோற்று நீருடன் கலந்து பருகவும். 10 முதல் 20 நாட்கள் இவ்விதம் செய்து வர பல ஆண்டுகள் சர்ம நோயால் அவதிப்படுபவர்கள்—இதிலிருந்து நிவாரணம் பெறுவார்கள்.

## பேதி அதிகமானுல்

உணவுக் குற்றம் காரணமாக அதிகமாகப் பேதியாகி, களைப்பு ஏற்பட்டால் உடனடியாகச் சக்திபெற, கீழ்க்கண்டவற்றை திரவமாக அருந்தலாம்.

எலுமிச்சம் பழச்சாறு
மாதுளம் பழச்சாறு
சப்போட்டாப் பழம்
மங்குஸ்தான் பழம்
ஆப்பிள் பழம்,

இவற்றில் ஏதாவதொன்று சாப்பிடவும்.

'கூவைக் கிழங்கு' எனப்படும் அரரூட் கிழங்கு மாவை, கஞ்சியாகக் காய்ச்சி, உப்பு சிறிது கூட்டி 6 மணி நேரத்திற்கு ஒரு முறை 1 குவளை அருந்தலாம். பால், காபி, அருந்தக் கூடாது, டீ அருந்தலாம். பேதி உடன் கட்டுப்படும். களைப்பும் ஏற்படாது.

நாள்பட்ட கழிச்சலால் அவதிப்படுபவர்கள், சீரகத்தை வறுத்துப் பொடித்து எலுமிச்சம் பழச் சாற்றில், கலந்து, நீர் கலந்து காய்ச்சி 1 குவளை விதம் காலை, மாலை இரு வேளை 5 நாட்கள் பருகி வர, கழிச்சல் நீங்கும்.

## குழந்தைகளின் சொறி சிரங்கு நீங்க

5 வயதுக்கு மேற்பட்ட கிராமத்துக் குழந்தைகள், மண், குப்பை மேடுகளில் புழங்குவதால், சொறி சிரங்கு ஏற்படும். இதற்கு எவ்வளவு ஊசி மருந்து கொடுத்தும் நிவாரணம் கிடைக்காது.

இதற்கு ஒரு எளிய சிகிச்சை:

வேப்பம் பட்டை 10 கிராம்
வசம்பு 10 கிராம்
மஞ்சள் 1 துண்டு
தும்பை இலை 1 பிடி

இவற்றுடன் கருஞ்சீரகம், நன்னாரி இவை வகைக்கு சிறிது சேர்த்தரைத்து தினம் காலையில் குளிப்பதற்கு முன் சொறி சிரங்கு உள்ள இடங்களின் மீது தடவி 15 நிமிடம் ஊற வைக்கவும். பிறகு இலுப்பைப் பிண்ணாக்குடன் கலந்து பொடி செய்துள்ள சீயக்காய்ப் பொடியை அவற்றின் மீது தேய்த்துக் குளிக்கவும். தூய்மையான வெள்ளாடையால் துடைத்து விட்டுப் பின் சுத்தமான தேங்காய் எண்ணெயைத் தடவி வரவும்.

இவ்விதம் 10 நாட்கள் செய்துவர, சொறி சிரங்கு தொல்லை அடியோடு நீங்கும். ஆலமரப்பட்டையைக் கஷாயமாக செய்து பால் கலந்து ஒரு டம்ளர் உள்ளுக்குக் கொடுத்து வர, மீண்டும் இவைவராது.

## சிறுவர்களின் கணைநோய் நீங்க

"கணை' என்பது சிறுவர்களைப் பீடிக்கும் - இளைக்கவைக்கும் நோய். காசநோயாளி போல் காட்சியளிக்கவைக்கும் இந்தக் 'கணை' நோயால், உடம்பு எப்போதும், 'கண, கண' என்று தகிக்கும்; இதனைப் போக்க எளிய சிகிச்சை முறை :

சீரகம் 1 ஸ்பூன்
அதிமதுரம் 1 துண்டு
சாதிக்காய் அரைத்துண்டு
கடுக்காய் 3
கிராம்பு 5
வெங்காயம் 5
மாதுளம்பூ 15

இவற்றை நன்கு இடித்து அரை லிட்டர் தண்ணீர் இட்டுக் காய்ச்சி கால் லிட்டராகச் சுருக்கி வடிகட்டி, 125 மில்லி அளவு வீதம் தினம் காலை, மாலை இருவேளை தேன் சிறிதுவிட்டுப் பருகிவர, கணைநோய் தணிந்து, உடல் வளர்ச்சி காணும்.

—தொடரும்

# நலவாழ்வு தரும் யோகாசனங்கள்



யோகாசன ஆசிரியர் O. R. சீனிவாசன்.

செல்வம் இருந்தென்ன? சீரோடு வாழ்ந்தென்ன? சிறப்புற்ற வசதிகள் யாவும் இருந்தென்ன? நல்வாழ்வின்றி நோயால் நலிந்து மிக உடல்வாடி நானிலத்தில் மானிட ராய் வாழ்ந்து பயனென்ன? நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்று புகழ்கின்ற ஆன்ருேரின் முதுமொழிதனே நாம் உணர்ந்து, நல்வாழ்வின்வகையறிய, அவர்கள் பின்பற்றிய சூரிய நமஸ்காரங்கள், யோகாசன பயிற்சிகள், பிராணு யாம முறைகள், உணவு நற்பழக்கங்கள் முதலியவற்றை நன்கு அறிந்து பழகினுல் நாமும் நலமுறலாம், நாடும் நல முறும்.

''விசையுறு பந்தினைப்போல்—உள்ளம்
வேண்டியபடி செல்லும் உடல் கேட்டேன்
நசையறு மனங்கேட்டேன்—நித்தம்
நவமெனச் சுடர்தரும் உயிர்கேட்டேன்
தசையினைத் தீ சுடினும்—சிவ
சக்தியைப் பாடுநல் அகம் கேட்டேன்''

எனவும்

எனேச்சுடர் மிகு அறிவுடன் படைத்து விட்டாய்
வல்லமைதாராயோ—இந்த
மானிலம் பயனுற வாழ்வதற்கே?
சொல்லடி சிவசக்தி—நிலச்
சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ?

எனவும் பாரதி பாடுகிருர்.

உடலும் உயிரும் பல்பும்-மின்சாரமும் மாதிரி. அமைந் திருக்கின்றன. மின்சாரம் தனது பொலிவு-ஒளி இவற்றை பல்பின் உதவியின்றி எப்படி வெளிப்படுத்த முடியும்?

ஆகவே, உடலுக்கு உயிரும் அவசியமென ஆகிறது. பகவானே பல்வேறு சந்தர்ப்பங்களில் வெவ்வேறு உடல்களைத் தாங்கிக்கொண்டு பூலோகத்தில் அவதாரமெடுத்ததாக நம் புராணங்கள் கூறவில்லையா? மகான்களும் அவ்வாறே உடலைத்தாங்கிக்கொண்டு தானே மக்களிடையே தோன்றி பல அரிய பெரிய காரியங்களைச் சாதித்தனர். உடலுக்கும்-உயிருக்கும் உள்ள நெருங்கிய தவிர்க்க முடியாத சம்பந்தத்தை வெளிப்படுத்தவே உடலும் உயிரும் போலவும், மலரும் — மணமும் போலவும் என்ற வர்ணனை பழக்கத்தில் இருந்து வருகிறது போலும். ஆகையால் வாழ்க்கையிலே உடலுக்கு முக்கிய பங்குண்டு என்பது நன்கு நிரூபணமாய் விட்டது. ஆனால் அதே சமயத்தில் உடலை பூமிக்குப் பாரமாய் இருக்கவிடாமல், நல்ல வழியிலேயே செயல்பட்டு உப்யோகமாக இருக்கச் செய்ய வேண்டும் என்றும் உணர்த்தப்படுகிறது. அத்தகைய திறன் உடலுக்கு இருக்கவேண்டுமானால் அதை நல்ல முறையிலே பேணி வளர்க்க வேண்டும். நியமத்துடன் வாழ பழக வேண்டும். அதைத்தான் நல்வாழ்வு என்று குறிப்பிடுகின்றார்கள். உள்ளமும், உடலும் சரியாயிருந்து, உயிரும் உதவி புரிந்து தொண்டும் பர நலனுக்காகவே என்றால், பரமனின் அருள் கிடைத்தே தீரும். இந்நோக்கத்தோடு சகல அம்சங்களையும் தாங்கிக்கொண்டு வெளிவரும் 'சூரிய நமஸ்காரங்களை, யோகாஸன பழக்கங்களைத் தகுந்த விளக்கங்களுடன் 'மூலிகைமணி'யில் எழுதிவருவேன். வாசகர்கள் படித்துப் பயன்பெறுவார்களாக!

## சூரிய நமஸ்காரங்கள்

சூரிய நமஸ்காரங்களால் ஒரு செலவும் உண்டாகாது. இவைகளைச் செய்ய வேறு யாதொரு உபகரணங்களும் தேவை இல்லை. ஆகையால் ஏழைகளும் இதைப் பழகிப் பயனுறலாம். ஒவ்வொருவரும் தம் தம் இல்லத்திலேயே பழகலாம். அனேகர் கூடி மைதானங்களில் ஏக காலத்தில் பழகலாம். ஆகையால் நம் பள்ளிக்கூட மாணவர்கள் தங்கள் உடற்பயிற்சி வகுப்புகளில் பழகிப் பயனுற அனுகூலமானவை. இத்தகைய அப்பியாசத்தினால் தசைகளும், தசை நார்களும் மாத்திரமன்றி எல்லா நரம்புப் பிரதேசங்களும்

வளர்ச்சியடைந்து உள்ளிருக்கும் எல்லா இந்திரியங்களும் தங்கள் தங்கள் வேலைகளைச் சரிவர நிறைவேற்றும்படி செய்கின்றன. இவைகளைப் பழகுதலால் முகத்திற்கு தேஜசும் சரீரத்துக்குச் சாந்தியும் வனப்பும் ஏற்படும்.

ஹிந்துக்கள் அல்லாதவர்க்கு இது ஒரு மத சம்பந்தமான ஆசாரம் என்ற ஒரு எண்ணம் தோன்றும். குளிப்பதைப்போல இது ஒரு காரியமாகும். சூரியன் எப்படி எல்லா தேசங்களுக்கும் பொதுவோ, அதே மாதிரி சூரிய நமஸ்கார பயிற்சியும் பொதுவும் இன்றியமையாத ஒன்றும் ஆகும்.

சூரியனே ஆரோக்கிய பாக்கியத்தின் சுரங்கம். சூரியனிடமிருந்து நமக்கு வெளிச்சமும், உஷ்ணமும் கிடைக்கிறது. பிராணி வர்க்கத்திற் கெல்லாம் ஆதவனே ஆதாரமானவன். ''விளையும் பயிர்களுக்கு வெயில் எவ்வளவு முக்கியமோ அப்படியே வளரும் குழந்தைக்கும், மற்றும் எல்லா ஜனங்களுக்கும் சூரியன் ஒளியும் உஷ்ணமும் மிகவும் முக்கியமானது என்பதை எல்லோரும் அறிவர்- எல்லா பொருள்களிலும் உள்ள சக்தியானது பிரத்யட்சமாகவே சூரியனால் கொடுக்கப்படுகிறது. ஓடும் நீர், வீசும் காற்று, சஞ்சரிக்கும் மேகங்கள், இடிக்கும் இடி, தோன்றும் மின்னல், பெய்யும் மழை, பனி, செடிகள் முதலியவைகளின் அபிவிருத்தி, பிராணிகள், மனிதர்கள் முதலியவர்களுடைய உஷ்ணம், அசைவு, விறகு, கரி இவைகள் எரிவது முதலிய இவைகளெல்லாம் ஸ்புடமான சூரிய சக்தியே. எல்லா உணவுப் பொருள்களுக்கும் ஆதாரமாயுள்ள வெயிலே வியாதிகளைக் குணப்படுத்துவதில் முக்கியமா யிருக்கின்றது. ஆகையால் சூரியனுடைய கிரணங்களுக்கும் நமக்கும் சம்பந்தம் உண்டு என்பதை நமது முன்னோர்கள் கண்டு சந்தியா, உபாசனை, சூரியநமஸ்காரம் முதலியவைகளை வேத மந்திரங்களுடனும், பீஜ மந்திரங்களுடனும் சேர்த்துப் பழகி வரும்படி விதித்திருக்கிறார்கள், பலஹீனமான இருதயத்தையும், சுவாசகோசத்தையும் உடையவர்கள் சூரிய நமஸ்காரங்களையும் பீஜ மந்திரத்துடன் கிரமமாகச் செய்து வந்தால், அவர்களுடைய வியாதிகள் அவர்களை விட்டு அகன்றுவிடும். இதில் சந்தேகம் வேண்டியதில்லை.

—தொடரும்.




## கேள்வி - பதில்

கேள்வி : எங்கள் அம்மா, எப்போதும், வயிறு எரிகிறது என்கிருர். காரம் சிறிது சாப்பிட்டாலும் நெருப்புபோல் எரிகிறது என்கிருர். சிறுவன் சாப்பிடும் அளவுதான் சாப் பிடுகிருர். மீறி சாப்பிட்டால் வாய் குமட்டல் ஏற்படுகிறது என்கிருர். இதனைப் போக்க சிகிச்சை கூறவும்.

பதில் : அம்மாவுக்கு, வயிற்றில் ரணம் இருப்பதை உங்கள் கடிதம் உணர்த்துகிறது. மணத்தக்காளி, வெந்தயக்கீரை, பசளை போன்ற கீரைகளைப் பாசிப்பயறு சேர்த்து கடையல் செய்து தினம் பகல் மட்டும் சாப்பிடச் சொல்லவும். மாதுளம் பழம் வாரம் 2 சாப் பிடச் சொல்லுங்கள். அதிமதுரம், சீரகம், இரண்டையும் சிறிது அளவு எடுத்து நசுக்கி. கஷாயம் போட்டு மாலையில் பால்கலந்து சாப்பிடச் சொல்லுங்கள். நன்கு குழைய வேகவைத்த கஞ்சி இனங் களை இரவில், கறிவேப்பிலை, கொத்துமல்லி துவையலுடன் சேர்த்து சாப்பிடச் சொல்லுங்கள். பொடுதலை காய்கிடைத்தாலும் அரைத்து உண்ணலாம். காரட், வெங்காயம், மோர், பச்சடி சாப்பிடலாம். 15 நாட்கள் சாப்பிட, நோய் தணியும், விரைவில், முழுதும் குண மாகி, காரம் போன்றவற்றை பழையபடி சாப்பிட வேண்டுமானுல், 1 மாதம் எம்மிடம் மருந்து சாப்பிட நலம்பெறலாம். தனிப்பட்ட கடிதம் எழுதவும். அல்லது நேரில் வந்து ஆலோசனை பெறவும்.

கே : என் மாமா ஒரு கடையில் வேலை செய்து வந்தார். அந்த வழியே ஒரு நாள் பிணம் எடுத்துச் சென்ருர்கள். அது முதல் காதில் இரைச்சல் ஏற்பட்டு அப்படியே உள்ளது. ஆங்கில மருத்துவர் பலரிடம் காட்டியும் சிகிச்சை பலனளிக்க வில்லை. எளிய மூலிகை முறை கூறவும்.

ப : மாமாவின் காது இரைச்சலுக்குக் காரணம், உடலில் போதிய அளவு சக்தி இல்லாமையே யாகும், நன்ஞரி வேர், அருகம் புல், தூதுவளை இம் மூன்றையும் சிறிதளவு எடுத்து காஷாயம் செய்து பால் தேன் கலந்து வாரம் 3 நாட்கள் சாப்பிடச் சொல்லுங்கள் 1 மாதத்தில் பலன் கிடைக்கும், சத்தான உணவு உண்ணவும்.

கே : என் முகத்தில் மூக்கின் கீழ் சில இடங்களில் வெள்ளையாக பசை போன்று தேய்த்தால் வருகிறது. சோப் போட்டால் சில மணி நேரம் இல்லை. மீண்டும் வருகிறது. இதற்கு என்ன செய்யலாம்?

**ப : உடம்பில் கொழுப்புச் சத்து அதிகமாக உள்ளது. கடலை எண்ணெயை நீக்கிச் சூரியகாந்தி எண்ணெயைச் சேர்க்கவும். தினம் மூன்று வேளை முகத்தை வெந்நீரால் கழுவவும். நன்னாரி, சந்தனம், கருஞ்சீரகம், இவற்றைப் பொடி செய்து பால் ஏடுடன் குழைத்து இரவில் மேற்பூச்சாகப் பூசி காலையில் சீயக்காய் போட்டுத் தேய்க்கவும். அடிக்கடி எலுமிச்சம் பழச் சாறும் தேய்க்கலாம். இதனால் தாங்கள் குறிப்பிட்ட குறைகள் விலகும்.**

கே : மூலிகைகள் பற்றிச் சொற்பொழிவாற்ற அழைத்தால் வருவீர்களா?

**ப : மூலிகைகள் பற்றிய வண்ணப் புகைப்பட விளக்கங்களுடன் தொடர் சொற்பொழிவே ஆற்றத் தயார்! அழைத்தால் வருவேன்!**

கே : எனக்குக் கழுத்தில் திட்டுத் திட்டாக சிவப்பாக இருக்கிறது. இது வெகு நாட்களாக இருப்பதால் இதை சிவப்பு மச்சம் என்று எல்லோரும் கூறுகிறார்கள். சிகப்பிலும் மச்சம் உள்ளதா? இது கழுத்துப் பகுதியில் இருப்பதால் பார்ப்பதற்கு அசிங்கமாக உள்ளது. ஆனால் இதனால் தொந்தரவு ஒன்றும் ஏற்படவில்லை. எனக்கு ஆங்கில மருத்துவர்களிடம் செல்வதில் நம்பிக்கை யில்லை. தயவு செய்து இதைப் போக்க எனக்கு ஒரு வழியைக் கூறுமாறு மிகத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

**ப : பிறவியிலிருந்தே இப்படி இருந்தால் மாற்ற முயற்சிக்க வேண்டாம், பலன் ஏற்படாது. இடையில் வந்திருப்பின், சத்துக் குறைவால் வந்திருக்கும். பப்பாளிப் பழம், நன்னாரி வேர், ஆரஞ்சு, ஆப்பிள், ஆகியனவும், கொத்துமல்லி, கறிவேப்பிலை துவையல் போன்றவற்றையும் அன்றாடம் உண்டுவரவும். மேற்பூச்சுக்கு, கஸ்தூரி மஞ்சள், சந்தனம், இவற்றை அரைத்துப் பூசலாம். படிப் படியே குணமாகும்.**

கே : ஆண்மைக் குறைவு யோகாசனப் பயிற்சி மூலம் அறவே நீக்கப்படுகிறது என்பது சரியா?

**ப : தொடர்ந்து, யோகாசனப் பயிற்சிக் கட்டுரைகளைப் படித்துப் பாருங்கள், ஆண்மைக் குறைவு என்பது, மனமும் உடலும் தொடர்புடையது. எனவே, இரண்டும் நன்னிலையில் இருத்தல் அவசியம்.**

கே : அடிக்கடி ஜலதோஷம், தொண்டைக் கட்டு வராமலிருக்க என்ன செய்யலாம்?

ப : ஐஸ், தக்காளி, போன்றவை சாப்பிடவேண்டாம். குப்பை மேனி, தூதுவளை, முசுமுசுக்கை இவற்றை உணவில் அடிக்கடி சேர்க்கவும்.

கே : வந்தால் என்ன செய்யலாம்?

ப : வந்தாலும் மேற்கண்டவற்றையே மூன்றுநாள் தொடர்ந்து செய்யவும். எமது தயாரிப்பான சலதோஷ—சளி மாத்திரை வாங்கி வைத்துக்கொண்டால் ஆபத்துக்குதவும்.

கே : தங்கள் தந்தையார் நடத்திய மூலிகைப் பயிற்சியை நீங்களும் நடத்துவீர்களா?

ப : நிச்சயம் நடத்துவேன். டிசம்பர் 1 ஆம் தேதி தொடங்கத் திட்டம். அறிவிப்பை எதிர்ப்பாருங்கள்.

கே : வீட்டுச் சூழ்நிலையில், வல்லாரை, கரிசாலை, தூதுவளை இவற்றை எப்படி வளர்ப்பது?

ப : வட்டமான அகலமான தொட்டிகளில் வளர்க்கலாம். இவற்றிற்கு நீர் அதிகம் எப்போதும் தேங்கியிருக்க வேண்டும், எனவே, கிணற்றடிகளில் வளர்ப்பது நல்லது.

கே : மூளை உழைப்பு அதிகம் உள்ளவர்கள் எவற்றைச் சாப்பிடலாம்?

ப : பேரீச்சம்பழம் 4. தேன் 2 ஸ்பூன், கரும்புச்சாறு வாரம் 2 நாள், இளநீர் வாரம் 1 நாள், சப்போட்டா கிடைக்கும்போது 2. பப்பாளி தினம் $\frac{1}{4}$ பழம், கேழ்வரகு உணவு தினம் 1 கப், முருங்கைக் கீரை வாரம் 3 நாள் 1 கப் வீதம், மோர் தினம் 2 வேளை, உளுந்து வகை பண்டங்கள், கோதுமை உணவு, வெண்டைக்காய், காரட், கோசு ஆகியவை அடிக்கடி உண்டுவர மூளை உழைப்புள்ளவர் களுக்கு வலிமை ஏற்படும்.

கே : 'போஜன கஸ்தூரி'—என்று ஒரு மருந்து உண்டா? எங்குக் கிடைக்கும்?

ப. கிச்சிலிப் பழத்திற்குத் தான் இந்தச் சிறப்புப் பெயர். அஜீரணத்தைப் போக்கும், பசியைத் தூண்டி மகிழ்விக்கும். கஸ்தூரி போல் மணம் கமழும் அதனால்தான் 'போஜன கஸ்தூரி' என்று பெயர் வந்தது. நார்த்தை, கிச்சிலி, எலுமிச்சை போன்ற பழங்களுக் குத்தான் 'போஜன கஸ்தூரி' என்று பெயர்.

கே: கெடுதல் தராத, தினம் கிடைக்கக்கூடிய, நன்மை தரும் கீரை எது.

ப: அரைக்கீரை; புளியாரைக் கீரை.

கே: மயக்கம் வந்தால் உடன் 'குளுகோஸ்' சாப்பிடுவதுபோல், மூலிகை மருத்துவத்தில் ஏதாவது உண்டா?

ப: 'ஏன்' இல்லே? 'தேன் உண்டே!

கே: கொசுக் கடியால், 'யானைக்கால்' நோய் வராமலிருக்க என்ன செய்யலாம்?

ப: சிறுகுறிஞ்சான் செடிக் கஷாயம் வாரம் 2 நாள் பருகலாம் வெள்ளறுகைக் கொண்டுவந்து மாதம் 1 நாள் மிளகு. சேர்த்து அரைத்து நெல்லி அளவு சாப்பிடலாம்,

கே: சீனிச் சர்க்கரை உடம்புக்குக் கெடுதலா? அதற்குப் பதில் என்ன உபயோகிக்கலாம்?

ப: சர்க்கரை கெடுதல்தான், பனைவெல்லம், தேன் போன்றவை பயன்படும்.

கே: உங்களால் எந்தெந்த நோய்களுக்கு நல்ல சிசிச்சை தரமுடியும்?

ப: 'எல்லா நோய்களுக்கும்' என்று பதில் கூறமாட்டேன். அமரர் கண்ணப்பருடன் இருந்து பெற்ற அனுபவத்திலிருந்து, ஆஸ்துமா, மேகநோய், (V-D) சர்ம நோய். போன்றவற்றிற்கும், என் தனி ஆராய்ச்சியில், வயிற்று நோய், ஆண்மைக் குறைபாடு, வெண்மேகம் போன்றவற்றிற்கும், ஆதாரபூர்வமான மூலிகை மருத்துவ சிகிச்சை அளித்து பிணியாளர்க்கு நிறைவு அளித்து வருகிறேன். இந்த நோய்களுக்குரிய எமது மூலிகை முறைகளும். இது நாள்வரை நற்பயன் அளித்து வருகின்றன.

கே: நல்லதொரு கூந்தல் தைலம் செய்யும் முறையைக் கூறுங்களேன்!

ப: கரிசலாங்கண்ணியை வாங்கி வந்து இடித்து ½ லிட்டர் சாறு கலந்து அத்துடன் ½ லிட்டர் பசும்பால் கலந்து—3 லிட்டர் தேங்காய் எண்ணெயுடன் எடுத்து சிறு தீயில் காய்ச்சுங்கள், சாறு சுண்டியபின் வடிகட்டி வைத்துக்கொள்ளுங்கள். 'இயற்கையான மணங்கமழும் கூந்தல் தைலம்' அன்றாடம் பயன்படுத்துங்கள். உங்களால் தயாரிக்க முடியவில்லை யென்றால் எமக்கு எழுதுங்கள். தயாரித்து அனுப்புகிறோம்.

---

மூலிகை மணி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவரும், ஆசிரியரும், க. வேங்கடேசன், எம். ஏ., 22 பாலாஜி அவின்யூ, திருமலைப்பிள்ளை வீதி, தி. நகர், சென்னை-600 017,

ஆன்மநேய ஆசிரியர்: 'மூலிகை மன்னர்' அமரர் கண்ணப்பர்.



# முதல்வருக்கு மூலிகை மணியின் பாராட்டு



தமிழகத்தில் உள்ள 200 ஆரம்ப சுகாதார நிலையங்களில் சித்த மருத்துவமனைகளைத் திறக்குமாறு — முதல்வர் எம். ஜி. ஆர், ஆணைப்பிறப்பித்துள்ள செய்தியை — இயக்குனர் டாக்டர். ஜி. பாலசுப்பிரமணியம் அவர்கள் மூலம் அறிகிறோம். இந்நற்பணியை ஆற்றியதன் மூலம், சித்த மருத்துவ உலகுக்கு-அதிலும் பாளையங்கோட்டையில் சித்த மருத்துவம் பயின்றுவந்துள்ள மாணவர்களுக்கு அரிய வேலை வாய்ப்பினை அளித்துள்ளார். இந்நற்பணியை ஆற்றியமைக்காக முதல்வரை மூலிகைமணி பாராட்டுகிறது.

—க. வேங்கடேசன், ஆசிரியர், மூலிகை மணி